அன்புள்ள வாசகருக்கு,
ஆகஸ்டில் தொடர்கதை
யுடன் சந்திக்கிறேன்!
சந்தோஷந்தானே!

சுஜாதா

வண்ணப்படம்: சுபா






# ஒரு ஜனாதிபதி கடத்தப்படுகிறார்!

அமெரிக்க ஜனநாயகத்தில் உச்சவரம்பு இல்லாதபல விஷயங்களில் எழுத்து, கருத்துச் சுதந்திரமும் ஒன்று. ஒரு ஜனாதிபதி கட்டுக் கொல்லப்பட்டால், அவரைக் கொல்ல உதவி ஜனாதிபதியே சதி செய்ததாக நாடகம் போடுவார்கள். (கென்னடி—ஜான்சன்) ஒரு ஜனாதிபதியின் மனைவி தன் கற்பை ஒரு ரஷ்யனிடம் இழப்பதாக நாவலில் சித்திரிப்பார்கள். (இர்விங் வாலஸின் 'த செகண்ட் லேடி'). அதே போல இப்போது ஓர் அமெரிக்க ஜனாதிபதியை ஸி. ஐ. ஏ., எஃப். பி. ஐ. கழுகுகளின் கண்காணிப்பு இருக்கும்போதே எப்படிக் கடத்திச் செல்லலாம் என்று வழி கூறியிருக்கிறார்கள், 'தி கிட்நாப்பிங் ஆஃப் தி பிரஸிடெண்ட்' படத்தில்!

கனடா நாட்டு டொராண்டோ நகருக்கு விஜயம் செய்கிறார் அமெரிக்க ஜனாதிபதி. காரை விட்டு இறங்கி, மக்கள் வெள்ளத்தில் கை குலுக்கியபடியே நீந்தி, மேடை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறார். ஒரு கரம் நீள்கிறது. இடது கையை நீட்டுகிறார் ஜனாதிபதி. கிளிக்! அவரது கையில் விலங்கு பூட்டப்பட்டு விடுகிறது. பூட்டியவன்: மெக்ஸிகோ தீவிரவாதி ஒருவன். ஜனாதிபதி ஒரு கணம் திகைக்க, செக்யூரிடி புலிகள் அந்தத் தீவிரவாதி மேல் பாய... விடவில்லை அவன். தான் அணிந்திருக்கும் கோட்டின் உட்புறத்தைக் காட்டுகிறான். டைனமைட் குச்சிகள் பயங்கரமாகப் பல்லிளிக்கின்றன. அங்கே! ''கிட்டே நெருங்கினால் நான், உங்கள் ஜனாதிபதி இருவருமே குளோஸ்!'' என்று அச்சுறுத்தி ஆட்டுக்குட்டியை அடைப்பது போல் ஒரு வேனுக்குள் அமெரிக்க ஜனாதிபதியைச் சிறைப்படுத்தி விட்டு, விடுதலை செய்ய நிபந்தனைகள் போடத் தொடங்குகிறான், அந்த மொட்டைத் தலை மெக்ஸிகன். (கவனிக்க: வேனுக்குள்ளும் கட்டுக் கட்டாக டைனமைட் குச்சிகள். அவற்றை இயக்கும் ரிமோட் கண்ட்ரோல் சாதனம் மொட்டையன் வசம்!)

விறுவிறுப்பு ஊசி போட்டுப் படத்தைத் துவக்கி, இறுதிவரையில் இதயத் துடிப்பு ஏறிக்கொண்டே இருக்கும்படி செய்திருக்கிறார் படத்தின் டைரக்டர்.

வெறும் 'த்ரில்லர்' என்று சொல்லிவிட முடியாதபடிக்கு, உணர்ச்சிக் குமுறல்களுக்கும் உரிய இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. உதவி ஜனாதிபதி — தற்போதைய ஆக்டிங் ஜனாதிபதி — தலையாட்ட மறுத்தால், தீவிரவாதியின் நிபந்தனைகளுக்குப் பணிய மாட்டோம் என்று சொன்னால், ஜனாதிபதியின் சரித்திரம் முடிந்துவிடும். உதவிக்குப் பதவி உயர்ந்துவிடும்! உதவியின் மனைவி அந்த வழியில் அவரைத் திசை திருப்ப முயல்கிறாள்... போராட்டம். உதவி ஜனாதிபதி நம்மூர் ரகம் அல்ல. எனவே, 'என்ன வேண்டுமானாலும் செய்து ஜனாதிபதியைக் காப்பாற்றுங்கள்' என்று கூறிவிடுகிறார்!

ஸீட் ஓரத்துக்குத் தள்ளும் விறுவிறுப்பு க்ளைமாக்ஸில் இல்லை யென்றாலும் கடைசியில் ஜனாதிபதி சிறைப்பட்டிருந்த வேன் வெடித்துச் சிதறும்போது 'என்ன ஆகியிருக்குமோ அவருக்கு?' என்ற பதைப்பு ஏற்படத்தான் செய்கிறது. ஜனாதிபதி தப்பி விடுகிறார் என்று சொன்னால் சஸ்பென்ஸ் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது.

ஒன்று மட்டும் உதைக்கிறது. உயிர் தப்பிய ஜனாதிபதி ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆளான உதவி ஜனாதிபதியை ஏற்கனவே ராஜிநாமா செய்யும்படி கூறியவர், தாம் உயிர் தப்பியதற்கு நன்றி கூறுவது போல, 'உங்கள் ராஜிநாமாக் கடிதத்தைக் கிழித்துப் போடுங்கள்' என்று கூறுகிறாரே — அந்த இடத்தில் அமெரிக்க ஜனநாயகத்தின் மீது நாம் வைத்திருந்த நல்ல அபிப்பிராயத்தை 'கிட்நாப்' செய்து விடுகிறார்கள்.

-ஆலன் பாண்ட்

# எழுதுவோம்

மனிதனைத் தவிர, மற்ற உயிரினங்களுக்கு, மனத்திற்குள்ளே எழுந்த எழுச்சிகளை வாயாறப் பேசி, மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளத் தெரியாது. பிராணிகள் துன்பம் வந்தால் அழும்; கஷ்டப்படும். அம்மா என்று சத்தம் போடும். ஆனால் என்ன துன்பம் என்று வார்த்தை மூலம் வெளிக்காட்ட முடியாமல் அவதிப்படுவது பிராணிகளின் தன்மை. மனிதனுக்குத் துன்பம் வருவதற்கு முன்பும் தெரியும், வரும் துன்பத்தைத் தடுத்துக்கொள்ளவும் தெரியும். துன்பத்தை அதிகப்படுத்திக் கொள்ளவும் தெரியும். தாங்க முடியாத துன்பம் வந்துவிட்டபின் வாய்விட்டு 'என்ன பாவம் செய்தேனோ' என்றெல்லாம் சொல்லிக் கதறி அழவும் தெரியும். இப்படித் துயரைப் பகிர்ந்து கொள்வதன் மூலம் ஓரளவு ஆறுதல் பெறவும் முடியும். ஆக, எல்லா பிராணிகளைக் காட்டிலும் மனிதன் பாக்கியம் செய்தவன். அவனால் எண்ணங்களை எழுதியும் பேசியும் பகிர்ந்து கொள்ள முடிகிறது.

பலபேர் வாழ்க்கையில் நடக்கும் அன்றாட நிகழ்ச்சிகளை டயரியில் எழுதுவார்கள். ஒரு மனிதன் சிறு வயது முதல் 50 வயதுக்குள் எவ்வளவு மூட்டை அரிசி சாப்பிட்டிருப்பான்; எத்தனை வகையான துணிகளை உடுத்தியிருப்பான் என்று அளந்து பாருங்கள். எத்தனை முறை கோபித்திருப்போம், பொய் சொல்லியிருப்போம்; தீய காரியங்களைச் செய்திருப்போம் என்று எண்ணிப் பாருங்கள்.

இதுபோல் வாழ்வின் பல்வேறு அம்சங்களையும் சிறு வயது முதல் 50 வயது வரை கணக்கிட்டுப் பார்த்தால் ஒவ்வொன்றும் மலையாகத் தெரியும். எத்தனை தடவை வியாதி வந்தது, எத்தனை வித மருந்துகளை எவ்வளவு உட்கொண்டோம் என்ற எல்லாவற்றையும் எழுதிப் பார்த்தால் நாம் மனிதனா அசுரனா என்று நமக்கே சந்தேகம் வந்துவிடும். ஆனால் எத்தனை தடவை இறைவனைத் தொழுதிருக்கிறோம்? நாம ஜபம் செய்திருக்கிறோம்? தியானம் செய்திருக்கிறோம்? இறைவனுடைய திருத்தலங்களுக்கு யாத்திரை செய்திருக்கிறோம்? என்றெல்லாம் எண்ணிப் பார்த்தால், இவையெல்லாம் மிகவும் குறைவாகவே இருக்கும்.

எழுத்துக்கள் ஒவ்வொரு பாஷைக்கும் வேறுபட்டிருக்கும். மொழிக்கு மொழி எழுத்துக்களின் எண்ணிக்கையில் கூடுதல் குறைவு உண்டு. ஆனால் பகவானுடைய பெயரை எந்த பாஷையில் சொன்னாலும், எழுதினாலும் உச்சரிப்பு ஒன்றாகவேதான் இருக்கும். பாஷை மாறலாம்; எழுத்து மாறலாம். ஆனால் ஸ்ரீ ராமா, ஸ்ரீ கிருஷ்ணா, பரமேச்வரா, பார்வதி, நாராயணாபோன்ற நாமாக்களுடைய உச்சரிப்பு மாறாது. இந்த நாமாக்களுடைய அர்த்தமும் மாறாது. ஆகவே அனைவருக்கும் ஒன்றாக இருக்கக் கூடியது இறைவனுடைய திருநாமங்கள்தான்.



எனவே மனித வாழ்க்கையில் ஒவ்வொருவரும் இரண்டு விதமான விஷயங்களை எழுத வேண்டும். தினந்-தோறும் எவ்வளவு நல்ல காரியங்கள், தீய காரியங்கள் செய்தோம் என்பதை டயரியில் எழுத வேண்டும். வாரம் ஒரு முறை இவற்றைத் திருப்பிப் பார்த்து, கெடுதல்கள் நிறைய இருந்தால் அவற்றைக் குறைத்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். ஒவ்வொரு நாளும் கடவுளுடைய நாமாக்களைக் குறைந்த பக்ஷம் 16 தடவையாவது எழுதிவிட வேண்டும்.

நல்லவர்களாக வாழ்ந்து நல்லவற்றை

**எழுதுவோம்**

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்




வியாபாரம் என்றாலே புன் சிரிப் போடு நடத்தப்படும் 'பகற்கொள்ளை' என்ற எண்ணம் பலர் மனங்களில் நிலவுகிறது. இருப்பினும் நேர்மை யையும், நாணயத்தையும் சாகடிக் காமல் 'ஓகோ' என உயர்ந்த நிறு வனங்கள் பல உண்டு. பார்க்கப் போனால் அந்த நேர்மையும் நாணய முமே அந்த நிறுவனங்கள் உயர முக்கிய காரணமாய் இருந்திருக்கின் றன.

# செய்தொழில் சிறக்க...

ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை ஆசாரப்பன் தெருவில் டி. எஸ். ஜெயகோபால் செட்டியார் என்பவர் துணிப் பைகள் தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார். ஒரு சமயம் இவர் தம் தொழிலுக்குத் தேவைப்படும் சாயங்களை வாங்க ஸ்விட்ஜர்லாந்து கம்பெனி ஒன்றுக்கு 'ஆர்டர்' அனுப்பினார். போக்குவரத்து வசதிகள் பெருகியிராத அந்தக் காலத்தில் கப்பல் மூலம் செட்டியார் கேட்டிருந்த சாயங்களைப் பெரிய டின்களில் அனுப்பியது ஸ்விட்ஜர்லாந்து கம்பெனி. அவற்றை எடுத்து வந்தபோது அவற்றில் குறிப்பிட்ட அளவை விடக் குறைவான எடையுடன் சாயம் இருந்ததைக் கண்ட செட்டியார், இது குறித்து ஸ்விட்ஜர்லாந்து கம்பெனிக்குப் புகார்க் கடிதம் எழுதினார். அதற்கு அந்தக் கம்பெனி உடனே பதில் எழுதியது. 'மன்னிக் கவும். தவறு நேர்ந்து விட்டது. சரியான எடையில் சாயம் டின்களை ஒரு முறைக்கு இரு முறை பரிசோதித்து இன்று கப்பல் மூலம் மறுபடியும் அனுப்பி உள்ளோம்; குறை வான எடை கொண்ட சரக்குகளை அப்படியே வைத்திருங்கள். எங்கள் கம்பெனியின் பிரதி நிதி இந்தியா வரும்போது இது பற்றி ஆவன செய்வார்' என ஸ்விட்ஜர்லாந்து நிறுவனம் தன் பதிலில் குறிப்பிட்டு இருந் தது. அதன்படி இரண்டொரு மாதங்களில் கம்பெனி பிரதிநிதி இந்தியா வந்தார். இந்திய சுற்றுப் பயணத்தின்போது அவர் பயன் படுத்துவதற்கென ஒரு செவர்லே - இம் பாலா கார் கப்பலில் வந்து இறங்கியது. ஆச்சாரப்பன் தெருவில் கார் நுழைய முடி யாமல் போகவே, தெரு முனையில் காரை நிறுத்திவிட்டு அந்த அதிகாரி நடந்தே சென்று குறைவான எடை கொண்ட சாய டின்களைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு ஜெயகோபால் செட்டியாரிடம் நேரடியாக மன்னிப்பும் கேட்டுக் கொண்டாராம்.

## பார்க்கரின் பாராட்டு!

25 ஆண்டுகளுக்கு முன்னர், ஜரிகை வேட்டி தயார் செய்யும் எல். என். எஸ் இராமமூர்த்தி என்ற மதுரையைச் சேர்ந்த ஒருவர் நெடு நாட்களாகப் பயன் படுத்தி வந்த பார்க்கர் பேனாவின் 'நிப்பு' உடைந்து விட்டது. அதற்குத் தேவையான 'நிப்பு' அப்போது இந்தியாவில் கிடைக்க வில்லை. எனவே நிப்பு உடைந்த பேனாவை, பார்க்கர் கம்பெனிக்குத் திருப்பி அனுப்பிய ராமமூர்த்தி, அத்துடன் ஒரு கடிதத்தையும் அனுப்பியிருந்தார். 'பார்க்கர் பேனாவிற்கான நிப்பு இங்கு கிடைக்கவில்லை. எனவே நிப்பு உடைந்த பேனாவை உங்களுக்கு அனுப்பி உள்ளேன். எங்கள் நாட்டில் இறக்குமதி விதிமுறைகள் மிகவும் கடுமையாக இருப்ப தால் நீங்கள் புதிதாக நிப்பு போட்டு அல்லது பழுது பார்த்து அனுப்பும் என் பேனாவைச் சுங்க வரி கட்டி என்னால் வாங்க இயலாது. எனவே என் பேனாவைப் பழுது பார்த்து அதைப் பரிசுப் பார்சலாக அனுப்பி வைக்கவும்' என இராமமூர்த்தி தம் கடிதத் தில் குறிப்பிட்டிருந்தார். அதற்கு இணங்க, பார்க்கர் கம்பெனி, இராமமூர்த்தி அனுப்பிய பேனாவின் அடிப் பாகத்தைத் தவிர மற்ற பாகங்கள் முழுவதையும் புதிதாகப் பொருத்தி



எவ்விதக் சட்டணமும் வசூலிக்காமல் இராமமூர்த்திக்குத் திருப்பி அனுப்பியதுடன் கூடவே ஒரு கடிதத்தையும் இணைத்திருந்தது. இந்தியாவைச் சேர்ந்த நீங்கள் எங்கள் கம்பெனியின் தயாரிப்பைத்தொடர்ந்துபயன் படுத்தியதுடன், அது பழுது பட்டநிலையிலும் எங்களுக்கே அனுப்பிச் சரி செய்து மறுபடியும் பயன்படுத்த நினைத்ததை எங்கள் கம்பெனி பெரிய கௌரவமாகக் கருதுகிறது. உங்களைப் பாராட்ட நினைக்கிறது என பார்க்கர் கம்பெனி தனது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது.




## சிறப்புப்பெற்ற 'ஜெனரல் மோட்டார்'

உலகப் புகழ் பெற்ற ஜெனரல் மோட்டார்ஸ் நிறுவனம், ஒரு முறை தயாரித்து விற்பனை செய்த கார்களில் ஏதோ ஒரு பாகம் குறையோடு பொருத்தப்பட்டுவிட்டது என்பதை கார்கள் விற்பனையான பின்பு தான் அறிந்தது. உடனே அந்த ஆண்டு தயாரித்து விற்பனை செய்யப்பட்ட அனைத்துக் கார்களையும் திரும்பப் பெற்று, அரைகுறையாக இருந்த அந்தப் பாகத்திற்குப் பதிலாக, புதிதாக நன்முறையில் செய்யப்பட்ட பாகத்தைப் பொருத்தித் திரும்ப அளித்தது. இச்சம்பவம் பற்றி ஜெனரல் மோட்டார்ஸ் கம்பெனியின் துணைத் தலைவர் எழுதிய "On a clear day at General Motors" என்ற புத்தகத்தில் மேலும் சில தகவல்கள் காணப்படுகின்றன. மேற்கூறியவாறு குறை கொண்ட பாகத்துடன் விற்கப்பட்ட கார்களைத் திரும்பப் பெற்று அவைகளில் நல்ல பாகத்தைப் பொருத்தி அனுப்புவதில் ஏற்பட்ட கால தாமதம் பற்றியும், அதற்குக் காரணமானவர்கள் பற்றியும் துணைத்தலைவர் விவரமாக எழுதியுள்ளார். தம் கம்பெனியின் குறையைப் பகிரங்கமாக ஒத்துக்கொண்டதோடு, அது பற்றித் தாம் எழுதிய புத்தகத்திலும் குறிப்பிட்டதைத் தொழில் நேர்மை என்றுதானே சொல்ல வேண்டும்.

-மெய்ஜி

நன்றி: வெற்றியின் வரலாறு



முப்பத்தாறு வயதாகும் கிறிஸ்டோபர் ஹூக்ஸ் சமீபத்தில் பிரிட்டிஷ் டெலிவிஷன் வினா விடைப் போட்டியில் "மாஸ்டர் மைண்ட்" என்ற பட்டத்தைப் பெற்றார். பி. பி. சி. வருடா வருடம் ஒரு வினா விடைப் போட்டி நடத்துகிறது. இதில் கலந்து கொள்ள 2500க்கும் அதிகமான பேர் விண்ணப்பம் செய்தாலும், ரேடியோ நிலையம் 48 பேர்களை மட்டுமே தேர்ந்தெடுத்துப்போட்டிகளில் கலந்துகொள்ளச் செய்யும். இந்தப் போட்டியில் இந்த வருடம் லண்டன் 'சப்வே' ரயிலில் டிரைவராகப் பணி புரியும் கிறிஸ்டோபர் ஹூக்ஸும் கலந்து கொண்டார். இந்தப்போட்டியில்கலந்து கொண்டவர்களில் பலர் பட்ட மேற்படிப்புப் படித்தவர்கள். ஆனால் ஹூக்ஸ் படிக்காத மேதை!

"ஸ்பீலியாலஜி" என்றால் என்ன என்று பேட்டியாளர் கேட்டதற்குப் படித்தவர்கள் பதில் கூற முடியாமல் திணற, படிக்காதஇந்தப்பாமரன்நொடியில் பதில் கூறினார். இது குகைகள் பற்றிய ஆய்வு என்றார்.

டெலிவிஷனில் நாடு முழுவதும் இந்த நிகழ்ச்சியைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த 1.5 கோடி ரசிகர்களும் திகைத்தனர். 17 வாரம் நடக்கும் இந்த வினா-விடைப் போட்டியின் 'மாஸ்டர்-மைண்ட்' ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஹூக்ஸுக்கு ஸ்படிகத்திலான கோப்பை பரிசாகக் கிடைத்தது. இதன் மதிப்பு 31200 ரூபாய்!

தகவல்: பட்டாணி

ஆதாரம்: வீக் எண்ட்

உங்கள் குழந்தை பிறரைவிட அதிகமான மனவளர்ச்சி பெற்று பள்ளியில், மாவட்டத்தில் - ஏன் மாநிலத்திலேயே முதன்மையாகத் திகழ, அன்புடன் வாங்கியளியுங்கள் ...

# - சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க் பாகம் 1

உங்களது அன்புச்செல்வம் அறிவுச்செல்வத்தையும் பெற்றால்தான் சக மாணவர்களுடன் போட்டியிட்டு முன்னேற முடியும். அறிவு வளர்ச்சிக்கு பாடப் புத்தகங்களை மட்டும் பயின்றால் போதாது. குழந்தைகளின் மனத்தில் இயல்பாகக் கிளரும் 'இது ஏன்?', 'அது எப்படி ?' என்பன போன்ற வினாக்களுக்குச் சரியான விடைகள் உடனுக்குடன் கிடைக்க வேண்டும். புரியாத புதிர்களுக்குத் தகுந்த விடைகளை பெற அருமையான அறிவுக்களஞ்சியம் –

**சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க்**

பாகம் 1

ஏறக்குறைய 200 வினாக்களுக்கு விடைகள்.




Vol. II in press

பெரிய சைஸ்
232 பக்கங்கள்
விலை ரூ. 20/-
தபால் கட்டணம்
ரூ. 4/-

இந்த அறிவுக் களஞ்சியத்தில் அடங்கியுள்ள சில அருமையான வினாக்கள் :

• வானவில் உண்டாவது எப்படி? • நோபல் பரிசு என்றால் என்ன? • கடிகாரத்தினுள் ஜுவெல்கள் பொருத்துவதேன்? • பேய்-பிசாசுகள் இருப்பது உண்மையா? • சிலர் குள்ளமாயிருப்பதேன்? • பெண்களுக்கு தாடி ஏன் வளருவதில்லை? • சீனத்து நெடுஞ்சுவர் ஏன் கட்டப்பட்டது? • உலக அதிசயங்கள் எங்கே போயின? • மூக்குக் கண்ணாடி மூலம் தெளிவாகக் காண்பது எங்ஙனம்? • உலகம் எத்தனை பழைமையானது? • பூகம்பம் எவ்வாறு ஏற்படுகிறது? • இறந்த கடல் என்றால் என்ன? • விண்வீழ்கொள்ளி என்றால் என்ன? • டெலிவிஷன் எவ்வாறு உருவாகியது? • கம்ப்யூட்டர் எவ்வாறு வளர்ச்சியுற்றது? • ஆண்டி-பயாடிக்ஸ் என்றால் என்ன? • தலை வழுக்கை ஆவதேன்? • ஆலங்கட்டிகள் உண்டாவது எப்படி? • சூரியமண்டலம் என்றால் என்ன? • கடல்களுக்குள்ளேயும் மலைகள் இருக்கின்றனவா?

விற்பனைக்குத் தயார்!

• ஆங்கிலம் மற்றும் இந்தியில் பாகம் 1, 2 & 3.




• தெலுங்கு, கன்னட, வங்காளி குஜராத்தி, மராட்டி மொழிகளில் முதற்பாகம். இதே விலை.

**From the makers of Rapidex English Speaking Course**

**Postage FREE** *On purchase of every 2 Books*

இந்தியாவெங்கும் பெரிய புத்தகக் கடைகளிலும் ஹிகின்பாதம்ஸ் மற்றும் ரெயில்வே புத்தக ஸ்டால்களிலும் கிடைக்கும்.

வி.பி.பி. மூலம் பெற தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி :



**PUSTAK MAHAL**
**Khari Baoli, Delhi-110006**
New Show Room:
10-B, Netaji Subhash Marg, New Delhi-110002

# கல்கி



1983 ஜூலை 3
ருத்ரோத்காரி ஆனி 19
மலர் : 41 இதழ் : 49



## உலகின் உச்சியில்!

அபரிமிதமான சந்தோஷத்தில் உலகின் உச்சியில் இருப்பதாக ஆங்கிலத்தில் கூறுவது வழக்கம். உருவகமாக மட்டுமின்றி உண்மையாகவே உலகக் கிரிக்கெட் கோப்பை விஷயத்தில் உலகின் உச்சிக்கு வந்துவிட்டனர் நமது அணியினர். ஐந்து நாள் டெஸ்டில் உலகின் சிறந்த டீம்களுக்கு ஈடு கொடுத்து நம்மவர் நிற்க முடியும்; ஆனால் குறிப்பிட்ட ஓவர்கள் மாட்சில் இந்தியா பிரகாசிக்க முடியாது என்று கருதப்பட்டு வந்தது. இந்த எண்ணத்தைப் பொய்யாக்கி, இறுதி ஆட்டத்துக்குத் தமது தோழர்களை அழைத்துச் செல்கிறார் கபில்தேவ். இந்த இறுதி ஆட்டத்தில் வெற்றியோ தோல்வியோ எவ்வாறாயினும் ஸெமி ஃபைனலில் தங்கள் திறமையை அவர்கள் உலகறியக் காட்டியுள்ளனர். இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனும் பெருமிதத்தில் பூரித்துப் போயிருக்கிறான்.

ஒரு நாள் ஆட்டத்தில் டாஸ் வெற்றி பெறுவது முக்கியமெனக் கருதப்படுகிறது. மான்செஸ்டரில் டாஸ் வென்றது இங்கிலாந்துதான். இந்த ஏமாற்றத்தைப் பொருட்படுத்தாமல் நம்மவர் தாக்குதலைத் தொடங்க இங்கிலாந்தும் ஒரு விக்கெட் நஷ்டத்துக்கு 69 எடுத்துத் தன் பலத்தை உணர்த்தியது. காப்டன் என்ற முறையில் கபில்தேவின் திறமை இந்த இடத்தில் வெளிப்பட்டது. ரோஜர் பின்னியைப் பந்து வீச அழைத்தார். இந்தக் கர்நாடக ஆல்ரவுண்டர் அரங்கின் மையத்துக்கு வந்ததும் மாயாஜாலம் போல் ஆட்டத்தின் போக்கு மாறத் தொடங்கியது. மோஹிந்தரும் கீர்த்தியும் ஐந்தாவது ஆறாவது போலர்களாக வந்து இங்கிலாந்தின் ரன்கள் எடுக்கும் வேகத்தைக் குறைத்தனர். இங்கிலாந்தின் இன்னிங்ஸ் முடிந்தபோது 60 ஓவரில் இந்தியா 214 ரன்கள் எடுக்க வேண்டும் என்ற நிலை. அதாவது ஓவருக்கு 3.57 ரன்கள்.

அசாத்தியமான காரியம் அல்ல என்றாலும் கவாஸ்கர் ஸ்ரீகாந்தின் ஜாக்கிரதையான, நிதான ஆட்டத்தில் இது, ஓவருக்கு ஐந்து ரன்கள் தேவை என்ற நிலைக்கு உயர்ந்து கவலையை அளித்தது. ஆனால் அமர்நாத்தும் சர்மாவும் மைய அரங்குக்கு வந்து பந்தைத் தாக்க ஆரம்பித்ததும் மறுபடி நம்பிக்கை துளிர்விட்டது. மோஹிந்தருக்குப் பிறகு வந்தார் பாட்டில். அவரும் சர்மாவுமாக இங்கிலாந்தின் வேகப் பந்து வீச்சைத் துணிந்து விளாசினார்கள். பத்து ஓவர்கள் பாக்கி இருந்தபோது ஒரு ஓவருக்கு 2.7 ரன்கள்தான் எடுக்க வேண்டும் என்ற சாதகமான நிலை. சர்மாவுக்குப் பிறகு குதூகலமாக மட்டையைச் சுழற்றிக் கொண்டு வந்தார் காப்டன் கபில். அவர் மைதானத்தின் மத்தியில் இருக்கும்போதுதான் வெற்றிக்குரிய ஷாட் அடிக்கப்பட வேண்டும் என்று தெய்வ சித்தமாகக் காரியங்கள் நடந்தன போலும்! எட்டு பவுண்டரிகளுடன் புயல் வேகத்தில் 51 ரன்கள் எடுத்து அவுட்டாகாதிருந்த பாட்டில் வெற்றிக்குரிய ஷாட்டை அடித்தார். அவ்வளவுதான், உலகமே இந்தியாவை வாழ்த்தியது. அவர்களுள் இங்கிலாந்து காப்டன் வில்லிஸும் ஒருவரான இந்திய டீமின் ஆட்டத் திறனை வியந்து போற்றி நமது நன்மதிப்பைப் பெறுகிறார். பாட்டிங் சாதனை புரிந்த அமர்நாத், பாட்டில், சர்மா ஆகியோரில் அமர்நாத் இந்த மாட்சின் சிறந்த ஆட்டக்காரராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

நாமோ நமது டீமில் உள்ள ஒவ்வொருவரையுமே கற்பனையில் கட்டிப் பிடித்து ஷொட்டுக் கொடுத்துப் பரவசமடைகிறோம்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

## 12

"**ப**த்மா... என் கிளாஸ்மேட்" என்று பக்கத்தில் பயந்த வண்ணம் நின்ற பத்மாவை ராம் காண்பித்தான்.

எதிரே நின்ற ராமின் பெற்றோருக்கு பத்மா புன்னகையுடன் கைகூப்பித் தன் மரியாதையைச் செலுத்தினாள்.

பத்மா எதிர்பார்த்தது போல் அவர்கள் வயதானவர்களாக இல்லை.

அப்பாவுக்குக் கிருதா மட்டும் வெள்ளையாகாமல் இருந்திருந்தால் ராமின் பெரிய அண்ணனைப் போல இருந்திருப்பார். ராஜ்குமாரைப் போலவே ரோஜா நிறத்தில் இருந்தார். மீசை இல்லை. வாயில் பைப் கடித்திருந்தார். விலை உயர்ந்த சாம்பல் நிற பாண்ட்டும், க்ரீம் நிற அரை ஸ்லாக்கும் அணிந்திருந்தார்.

ராமின் அம்மா, பத்மா கற்பனை செய்திருந்த மாதிரி கனத்த சரீரமுள்ள பெண்ணாக இல்லை. ஒல்லியாக அழகான கிளி மூக்குடன் இருந்தாள். தங்க பிரேம் மூக்குக் கண்ணாடி அவள் முகத்துக்கு எடுப்பாக இருந்தது. கணவர் அருகே நின்றபோது அவள் சற்று நிறம் கம்மிதான். ஆனால் பத்மாவை விடச் சிவப்பு. காது, கழுத்து மூக்கில் வைரங்கள் சுடர் விட்டன. ஜரிகையால் கனத்த கிளிப் பச்சை நிற காஞ்சீபுரம் உடுத்தி, பெரிய கொண்டை போட்டு வட்டமாகப் பூச் சுற்றியிருந்தாள்.

இருவர் தோற்றத்திலும் பரம்பரைச் செல்வத்தின் பளபளப்புத் தெரிந்தது. அவர்களுக்கு முன்னே நிற்பதற்குப் பத்மாவுக்குக் கூசியது.

முகத்தில் எந்தவித மாற்றத்தையும் காண்பிக்காமல் அவர்கள் பத்மாவைச் சாதாரணமாகப் பார்த்தார்கள்.

"வாம்மா" அன்று அம்மா அவள் கையை உரிமையுடன் பற்றி சோபாவுக்கு அழைத்துச் சென்றாள். ராமும் அப்பாவும் பின்னே நடந்தார்கள்.

அப்பா, "நேரே ஆபட்ஸ்பரிக்கு அழைச்சுக்கிட்டு வரப்போறேன்னு போன் பண்ணினே" என்றார்.

"பத்மாவுக்கு ஜுரம்ப்பா" என்றான் ராம்.

உடனே அம்மா, "ஜுரமா! என்ன பண்ணுது?" என்றாள். சோபாவில் அமர்ந்து பத்மாவின் கரத்தை இழுத்துத் தன் அருகே அவளை உட்கார வைத்துக் கொண்டாள்.

"ஒண்ணுமில்லே ஃபீவரிஷ்ஷா இருந்தது" என்றாள் பத்மா.

அம்மா புறங்கையை பத்மாவின் கழுத்தில் பதித்து, "ஜுரம் ஒண்ணுமில்லே" என்றாள்.

அப்பா, "டாக்டரம்மாவுக்கு நீ டெம்பரேச்சர் பார்த்துச் சொல்றயா?" என்றார். ராமைப் பார்த்து "ஜுரம்னு ஏண்டா தொந்தரவு பண்ணி அழைச்சுக்கிட்டு வந்தே? நாங்க அடுத்த மாசம் மெட்ராசுக்கு வரமாட்டமா?" என்றார்.



# நேசமுள்ள வான்சுடரே

''அவர் ஒண்ணும் தொந்தரவு பண்ணலே. நானாத்தான் வந்தேன்'' என்று பத்மா தலையைச் சற்றே குனிந்து சின்னப் புன்னகையுடன் சொன்னாள்.

''சிரிக்கிறப்ப நம்ம ரேகா மாதிரி இல்லீங்க?'' என்று கணவரிடம் அம்மா கேட்டாள்.

''ம்'' என்று அவர் ஆமோதித்தார்.

'ரேகா இவ்வளவு லட்சணமா இருக்காளாக்கும்' என்று ராம் தன் மனத்தில் சொல்லிக்கொண்டான்.

''வேணு. மேலே போயி கண்ணாடிக்குப் பக்கத்தில பூ இலைல சுத்தி வெச்சிருக்கேன்....''

''எடுத்துட்டு வரேம்மா'' என்று வேணு நாலு கால் பாய்ச்சலில் ஓடிப்போய் மாடிப் படியில் ஏறினான்.

பத்மா எங்கோ பார்த்தபோது ராமின் தாய் அவளை வேகமாக ஒரு முறை ஆராய்ந்



தான். ''ரொம்ப மெலிவா இருக்கியே. ரெண்டு வருஷத்திலே டாக்டராகப் போறே. நல்லாச் சாப்பிட வேண்டாமா?''

''அம்மா நீங்க அவளைப் பாராட்டணும்மா.''

''எதுக்குடா?''

''எங்க மெஸ் சாப்பாட்டிலே இந்த அளவுக்கு உடம்பை மெயின்டெய்ன் பண்ணிக்கிட்டிருக்கிறதுக்கு.''

''அவ உடம்புக்கென்ன? அவ ஹைட்டுக்கு இப்படித்தான் இருக்கணும்'' என்றார் அப்பா.

''உங்க வீடு எங்கே இருக்கு?'' என்று அம்மா கேட்டாள்.

''தௌஸண்ட் லைட்ஸ்ல.''

''சித்தி சித்தப்பாவெல்லாம் சௌக்கியமா இருக்காங்களா?'' அம்மாவே மறுபடியும் கேட்டாள்.

பத்மாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ராம் என்னைப் பற்றி எல்லா விவரங்களையும் சொல்லிவிட்டாரா?

''ம். நல்லா இருக்காங்க.''

''கொடைக்கானல் எப்பவாவது வந்திருக்கியா?''

''சினிமாவிலேதான் பார்த்திருக்கா'' என்றான் ராம்.

''ஒரு லீவுக்கு அழைச்சிக்கிட்டுப் போறேன்.''

வேலு நீட்டிய இலைப் பொட்டலத்தை அம்மா வாங்கிப் பிரித்தாள். நெருக்கமாகத் தொடுக்கப்பட்ட ஜாதி மல்லிகைச் சரத்தை—மூன்று முழம் இருக்கும்—எடுத்தாள். ''திரும்பும்மா'' என்று பத்மாவைத் திரும்பச் சொல்லி அவள் கூந்தலில் சூட்டினாள்.

அப்போது பத்மாவின் உடலெங்கும் ஒரு விதப் புல்லரிப்பு. சித்தி இப்படி ஒரு நாள் கூட எனக்குப் பூச்சூட்டி விட்டதில்லையே. இவர்கள் ஏன் என்மீது இவ்வளவு அன்பு செலுத்துகிறார்கள்? இவர்களுடைய அன்புக்கு நான் அருகதை உள்ளவள்தானா? இவர்களுக்கு என்னால் என்ன கைம்மாறு செய்ய முடியும்?

''உடம்பு நல்லா இருந்ததுன்னு ரிஸப்ஷனுக்கு வாயேம்மா'' என்றார் ராமின் அப்பா.

''ட்ரெஸ் இப்படி இருக்குதேன்னு கவலைப்படாதே. பத்துப் பட்டுப் புடவை மாடியில இருக்கு. நான் போட்டிருக்கிற நகையில பாதியைத் தர்றேன்.''

''அதுக்காகச் சொல்லலேம்மா'' என்று தயங்கிய பத்மா, 'என்னைத் தயவு செய்து விட்டுருங்க' என்கிற மாதிரிக் கெஞ்சும் பார்வையால் ராமைப் பார்த்தாள். அப்போது, அவன் அம்மாவின் சிவப்புப் பட்டுப் புடவையைப் பத்மாவுக்கு உடுத்தி விட்டு நகைகளை அணிவித்துக் கற்பனைக் கண்களால் ரசித்துக் கொண்டிருந்தான்.

''என் ப்ளவுஸ் கூட உனக்குச் சரியாக இருக்கும்''

ராம், ''வேண்டாம்மா. நீங்க ரெண்டு பேரும் போங்க'' என்றான்.

அப்பா, ''ஏன் நீ வரலியா? அத்தையும் மாமாவும் கண்டபடி திட்டப் போறாங்க. காலையும் மாரேஜுக்கு வராம ஏமாத்திட்டே. அப்புறம் உன் மாரேஜுக்கு யாரும் வரமாட்டாங்க'' என்றார்.

''என் மாரேஜ் நடக்கிற காலத்துல பார்த்துக்கலாம்'' என்ற ராம், ''நான் பத்மாவை ஹாஸ்டல்ல விட்டுட்டு வந்துடறேன்'' என்றான்.

''வேண்டாம். நீங்க ரிஸப்ஷனுக்குப் போங்க. பக்கத்திலே இருக்கிற பஸ் ஸ்டாப்பில என்னை விட்டுருங்க. நான் போயிருவேன்'' என்றாள் பத்மா.

உடனே அப்பா, ''வேண்டாம், வேண்டாம்'' என்றார். ராமைப் பார்த்து, ''நாங்க போயிட்டு வண்டியை அனுப்பறோம். நீ பத்மாவை அழைச்சுக்கிட்டுப் போயி ஹாஸ்டல்ல ட்ராப் பண்ணிட்டு ரிஸப்ஷனுக்கு வந்து சேரு'' என்றார்.

''அப்போ இன்னொரு தடவை பார்ப்போம்மா'' என்று அம்மா எழுந்தாள். ''நாளைக்கு நாங்க கொடைக்கானலுக்குப் போறோம். அடுத்த மாசம் திரும்பவும் வருவோம். நீ ஒரு சனி ஞாயிறு இங்க வந்து ரெஸ்ட் எடுத்துட்டுப் போ.., என்ன?''

பத்மா தலையை அசைத்து, ''சரிம்மா'' என்றாள்.

''இப்ப சரிம்பா'' என்றான் ராம் புன்னகையுடன்.

''அப்புறம்?'' என்று கேட்டார் அப்பா.

''உயிரே போனாலும் 'ரெண்டு நாள் படிப்பைத் தியாகம் பண்ணிட்டு அவ வரமாட்டா.''

''இங்க வந்து படிக்கலாமே. ஹாஸ்டலை விட இங்கதான் அமைதியாப் படிக்க முடியும்'' என்றார் அப்பா.

காரின் பின் சீட்டில் அம்மாவும் அப்பாவும் உட்கார்ந்ததும் பத்மா கரம் கூப்பி அவர்களுக்கு வணக்கம் தெரிவித்தாள். ராம், ''போயி, வண்டியைச் சீக்கிரமா அனுப்புங்க. வண்டி வந்துதான் நாங்க இங்கேந்து கிளம்பணும்'' என்று ஒப்புக்காகச் சொன்

மத்திய அமைச்சர்களில் பலர் இப்போது கதராடை அணியாமல் சபாரி சூட் அணிகிறார்களாம். இதன் காரணத்தை ஒரு நிருபர் ஒரு அமைச்சரிடம் கேட்க, அவர் கூறிய பதில் நமது சிந்தனைக்கெல்லாம் ஒரு விருந்து. அவர் சொன்னது: 'சபாரி சூட்டில்தான் ஏராளமாகப் பாக்கெட்டுகள் இருக்கின்றன.' —'பாதுஷா'



# N.S.K.

பைனான்சியர்ஸ்

(ஹையர் பர்ச்சேஸ் ப்ரமோட்டர்ஸ்)




**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில்**
**ஃபிக்சட் டெபாசிட்டுகள்**
**ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.**

# 21%

அன்பளிப்பு வெள்ளிக் குத்துவிளக்கு
ஒவ்வொரு ரூ.5000/-
(குறைந்தது இரண்டு வருடங்கள்)
டெபாசிட்டுக்கும்



**மாதாந்திர வட்டி விகிதங்கள்**

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|---|
| 15% | 16% | 17% | 18% | 21% |

(Minimum deposit acceptable Rs. 1000/- multiples)

உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்கள்
"கோல்டன் கேஷ் சர்ட்டிபிகேட் டிபாசிட் திட்டத்தின்"
மூலம் இருமடங்காகிறது.

# N.S.K.

சிட் ஃபண்ட்ஸ் (பி) லிமிடெட்




| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | 1,000 | × | மாதங்கள் | 50 | ரூ. | 50,000 |
| ரூ. | 1,000 | × | மாதங்கள் | 25 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | × | மாதங்கள் | 50 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | × | மாதங்கள் | 20 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | × | மாதங்கள் | 40 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | × | மாதங்கள் | 20 | ரூ. | 5,000 |
| ரூ. | 125 | × | மாதங்கள் | 40 | ரூ. | 5,000 |

எலமுறை : பாதுகாப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.

**சீட்டுகள் சேர, முதலீடு செய்ய தொடர்பு கொள்க :**

**பதிவு & நிர்வாக அலுவலகம்:**

எண். 38B, பர்கிட் ரோடு (முதல் மாடியில்),
(தி. நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்), தி. நகர், சென்னை 600 017.

ma 328

**Build your fortune with N.S.K.**

# எழுதியது யார்- போட்டி முடிவு

சரியான விடை:

அந்தஸ்து — காடவன்

அசையும்
அஸ்திவாரங்கள் — ஜி. நடராஜன்

விஷப்பரீட்சை — ஜி. எஸ். பாலகிருஷ்ணன்

கருப்பையா இனி
பள்ளிக்கூடம் — இந்திரா சௌந்தர்ராஜன்
போகக்கூடாது

சரியான விடை எழுதி ரூ. 250 பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்ளும் கல்கி வாசகர்கள்:

1. எல். கே. கோவிந்த்,
   பிளாட் 14, முதல் தெரு,
   பாலாஜி நகர், சென்னை-600092

2. எஸ். துரைராஜ்
   56, மெயின் வீதி
   புது ராமகிருஷ்ணாபுரம்
   திருப்பூர்-638607.

3. திருமதி கீதா விசுவநாதன்,
   5-526, இராமநாதபுரம் கிராமம்,
   பாலக்காடு-678001. (கேரளா)

னுன். எவ்வளவு 'லேட்டா' அனுப்ப முடியுமோ அவ்வளவு 'லேட்'டா அனுப்புங்க என்று அவனுடைய உள் மனம் பேசியது.

பத்மாவை அவன் மறுபடியும் பங்களாவுக்குள்ளே அழைத்துச் சென்று எல்லா அறைகளையும் மாடியையும் சுற்றிக் காண்பித்தான். உள் அலங்காரங்கள் அவளை வியப்பில் ஆழ்த்தின.

''இந்த மாதிரி வீட்டை சினிமாவில்தான் பார்த்திருக்கேன்'' என்று மாடியிலிருந்து இறங்கியபோது பத்மா சொன்னாள்.

''இந்த வீட்டைக் கூட சினிமாக்காரங்க ஷூட்டிங்குக்குக் கேட்டாங்க. அப்பா தர மாட்டேன்னு சொல்லிட்டார்.''

தோட்டத்தில் போடப்பட்டிருந்த மேஜை முன் இருவரும் அமர்ந்தனர். கடற் காற்று பத்மாவின் புடவையை வம்புக்கிழுத்தது. அவர்களைச் சுற்றி மாலைக் கால மலர்கள் தங்கள் இதயங்களைத் திறந்து உணர்வுகளை நறுமணமாக வெளியிட்டன. ராமின் முக பிரகாசத்தை இருட்டடிப்புச் செய்ய முடியாமல் அந்திக் கருக்கல் வெட்கப்பட்டது. கடலுக்கு மேலே வானத்தில் ஒரு பிறை முளைத்திருந்தது.

''நான் சிரிக்கிறப்ப ரேகா மாதிரி இருக்கிறதா அம்மா சொன்னாங்களே...''

''அந்த ரேகா யாருன்னு கேக்கறியா?''

''ம்.''

''அத்தை பொண்ணு. அப்பாவோட எல்டர் ஸிஸ்டர்ஸ் டாட்டர். ரேகாவோட அக்காவுக்குத்தான் இன்னிக்கு மாரேஜ்.''

''ரேகாவுக்கு இன்னும் ரெண்டு வருஷம் கழிச்சு நடக்கும்'' என்றாள் பத்மா.

''எப்படிச் சொல்றே?''

''உங்க படிப்பு முடிய வேண்டாமா?''

''என் படிப்பு முடியறதுக்கும் அவளோட கல்யாணத்துக்கும் என்ன சம்பந்தம்?'' ஒரு வகையான ஆத்திரம் தொனிக்க ராம் கேட்டான். ''பத்மா, ஐ விஷ்....''

''வாட் டு யு விஷ்?''பத்மா நிதானமாகப் புன்னகையுடன் கேட்டாள்.

''ஐ விஷ் யு வேரின்ட் ஸோ டிஃபிகல்ட் டு அன்டர்ஸ்டாண்ட்.''

''அப்படீன்னு?''

''ரேகாவுக்குக் கல்யாணம் முடிச்சு வைக்கறதுக்காக நாம ரெண்டு பேரும் இங்க உட்காரலேன்னு அர்த்தம்.''

பத்மா ஒரு கணம் அமைதியாக இருந்துவிட்டு, ''ஸாரி ராம்,கோபமா?'' என்றாள்.

ராம் அவள் விழிகளையே ஏக்கத்துடன் பார்த்தான்.

அவளும் மேஜையில் முழங்கைகளை ஊன்றித் தன் முகத்தை உள்ளங்கையால் ஏந்திப் பிடித்துக் கொண்டு அவன் கண்களையே பார்த்தாள். அவன் பார்வையின் கூர்மைக்கு ஈடு கொடுக்க முடியாமல் அவள் பார்வை மேஜையை நோக்கிச் சரிந்தது. புதிதாகச் சுரந்த கண்ணீரின் கொதிப்பை அவள் இமைகள் உணர்ந்தன.

மேஜை மீது படிந்திருந்த ராமின் கரத்தின் மீது அவளுடைய கண்ணீர் 'பொட்' டென்று விழுந்தது.

அவள் தலை கவிழ்ந்தபடியே இருந்தாள்.

ராம் அந்தக் கரத்தை மெதுவாக உயர்த்தி வாயருகே கொண்டு போனான்.

பத்மா தலை நிமிர்ந்து ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

கரத்திலிருந்த பத்மாவின் கண்ணீர்த் துளியை ராம் தன் உதடுகளால் ஒற்றியெடுத்தான்.

மாலை வெய்யில் அடிக்கும்போது மழை பெய்வதைப் போல் பத்மா கண்ணீருடன் 'களுக்'கென்று சிரித்து விட்டாள்.

ராம்: ''இந்தக் கடலோட நீல நிறம் மட்டும்தான் உன் கண்ணிலே இருக்குன்னு இத்தனை நாளும் நினைச்சிக்கிட்டிருந்தேன்.''

''இப்ப?''

''உப்பும் இருக்குங்கறதைத் தெரிஞ்சுக்கிட்டேன்'' என்று சொல்லிவிட்டுப் புன்னகை செய்தான்.

வேலு உயரமான எவர்சில்வர் காரியருடன் வாழை இலைகளைச் சுருட்டி எடுத்துக்கொண்டு வந்தான். ''வாங்கிட்டு வந்திட்டேங்க'' என்றான்.

பத்மா ''என்ன வாங்கிட்டு வரச் சொன்னீங்க? எனக்குப் பசியே இல்லே'' என்றாள்.

''எனக்குப் பசிக்குதே. அதை இப்படி வெச்சிட்டுப் போ. லைட்டைப் போடு. ஃப்ரிட்ஜ்ல தண்ணி வெச்சிருக்கியா?''

''இருக்குங்க.''

''எடுத்துட்டு வா'' என்றான்.

வேலு சென்றதும் ''உனக்கு ஒரு சின்ன வேலை'' என்றான்.

''சொல்லுங்க'' என்றாள் பத்மா.

''நீதான் பரிமாறப் போறே.''

(தொடரும்)

# துணுக்! தகவல் துணுக்!

## எக்ஸ்ரேயை விட உயர்ந்தது!

மனித உடலுக்குள் உள்ள அவயவங்களை பார்வையிட்டுப் பரிசோதிக்க எக்ஸ்ரே தான் அதிகமாக உபயோகப் படுகிறது. இதை விடச் சிறந்ததாக அல்ட்ரா ஸவுண்ட் சாதனம் இப்பொழுது உருவாக்கப்பட்டிருக்கின்றது. ஒலியை விட அதிக சக்தி வாய்ந்தது 'அல்ட்ரா ஸௌண்ட்'. இதன் அலைகளை உடலின் மேல் அசைத்து அவ்வலைகளுக்கு உடலுக்குள்ளிருந்து வரும் எதிரொலியைக் கொண்டு உடலுக்குள்ளிருக்கும் உறுப்புக்களைப் பரிசோதிக்கிறார்கள். இந்த எதிரொலியைப் பிம்பங்களாக மாற்றி டி.வி. திரையில் காண்பிக்க முடியும். 'அல்ட்ரா ஸவுண்ட்' அலைகள் ஒரு வினாடிக்கு 4000 முறைகள் அசைவதால் உடலுக்குள் இருக்கும் உறுப்புக்களின் அசைவுகளை அப்படியே சினிமா மாதிரி சலனப் படங்களாக டி.வி. திரையில் காட்டுகிறது. ரத்த ஓட்டம், இதயத் துடிப்பு, முதலியவற்றை நேராகப் பார்க்கலாம். கலர் டி.வி. மாதிரி வண்ணப் படங்களாகவும் காட்டலாம்.

—தகவல்: ரிஸர்ச் அண்ட் ரெஃப்ரன்ஸ்

---

வேலை கொடு

பஞ்சாப் கோவாபரேட்டிவ் மார்க்கெட்டிங் சொஸைட்டி என்ற அரசு அலுவலகத்தைச் சேர்ந்த 177 ஊழியர்கள் ஒரு கடிதத்தைப் பஞ்சாப் அரசுக்கு அனுப்பியிருக்கிறார்கள். இவர்களுள் ஒருவருக்குக் கூட 6 மாதங்களாக எந்த வேலையும் கொடுக்கப்படவில்லையாம். வேலையே செய்யாமல் சம்பளம் வாங்க மனச்சாட்சி இடம் தராததால் ஏதாவது வேலை கொடுக்கும்படி அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

—ஏ. கே. நாசர்

---

பேசுதல், மொழிதல், சொல்லுதல், செப்புதல், இயம்புதல், எடுத்துரைத்தல், பகருதல்... என்று கூடுமானவரை ஒரே அர்த்தத்தைச் சொல்லும் சொற்கள் மட்டும் தமிழ் அகராதியில் மொத்தம் நாற்பது உள்ளதாம்.

அரங்கராசன் சொல்லக் கேட்டவர்:
எம். இராஜேந்திரன்

பேசுதல்
செப்புதல்
மொழிதல்
இயம்புதல்
சொல்லுதல்
எடுத்துரைத்தல்
பகருதல்

---

பெண்கள்தான் சாதாரணமாக 'சள சள' என்று ஓயாமல் பேசுவார்கள், வம்படிப்பார்கள் என்ற பரவலான கருத்து நிலவி வருகிறதல்லவா? எந்த அளவுக்கு உண்மை என்று ஆராய்ச்சி செய்து டேல் ஸ்பெண்டர் என்ற பெண்மணி ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கிறார்.

(1) ஆண்கள்தான் பெண்களை விட ஒரேயடியாக அதிகம் பேசுகிறார்கள். எந்தக்கூட்டத்திலும் அல்லது மகாநாட்டிலும் பெண்கள் சொற்களை மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுத்து, சுருக்கமாகவும் விஷயத்தை விட்டுப் பிறழாமலும் பேசுகிறார்கள்.

(2) ஆங்கில மொழி முழுவதும் ஆண்களாலேயே உருவாக்கப் பட்டது. இதில் பெண்களின் கருத்துக்கள் வெளியிடப்படாமல் முடங்கிக் கிடக்கின்றன.

(3) ஆங்கில இலக்கணம் கூட ஆண்களுக்காகவே வகுக்கப்பட்டது. சொற்றொடர்களில் ஆண்களைப் பெண்களுக்கு முன்பாக வைப்பதே சரி என்று ஆங்கில இலக்கணம் கூறுகிறது. எடுத்துக்காட்டு கணவனும் மனைவியும் husband and wife பிள்ளைகளும் பெண்களும் Sons and daughters

இப்படிப் பல உதாரணங்களைத் தந்து மானிட வர்க்கத்தின் பாதியான பெண்கள் புறக்கணிக்கப்பட்டு மானிடரின் சிந்தனையும் பேச்சும் ஒருதலைபக்ஷமாக உள்ளது என்று டேல் ஸ்பெண்டர் நிரூபிக்கிறார்!

தகவல்: ரிஸர்ச் அண்டு ரெஃபரன்ஸ்



✖ அம்மன்குடி விநாயகர்



✖ அம்மன்குடி துர்க்கையம்மன்

பிரும்மதேவனிடம் கன்னியொருத்தியாலேயே தனக்கு மரணம் ஸம்பவிக்க வேண்டும் என்று வரம் கேட்டான். பெண்களுடைய வலிமையை எருமைப் புத்தியுள்ள அசுரன் எப்படி அறிவான்? இந்த வரம் பெற்ற தைரியத்தினால் தேவர்களையெல்லாம் வென்று இறுமாப்புடன் வாழ்ந்தான், மஹிஷாசுரன்.

தேவர்கள் பாவம்! மேரு மலைக் குகைகளில் மறைந்து, ஒளிந்து வாழ்ந்தார்கள். தேவர்களுடைய துரதிர்ஷ்டம் அவர்களுக்கு வீர மரணம் கிடையாது. 'தோல்வி தரும் அவமானத்தைச் சகித்துக் கொண்டு வாழ்ந்தாக வேண்டும். நமக்கெல்லாம் இது ஆறுதல் தரும் விஷயம். தோல்வியடைந்து துக்கப்

# மகிஷாசுரனின் அதிர்ஷ்டம்

பட்டாலும் தேவியின் அருள் பெற்றுவிட்டால் மறுபடியும் ஜெயம் உண்டாகும், நல்வாழ்வு கிடைக்கும் என்று நம்பிக்கை கொள்ளலாம்.

நம்பினோர் கெடுவதில்லை நான்குமறைத்தீர்ப்பு.
அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிகவரம்
பெறலாம்

என்று அழுத்தம் திருத்தமாகக் கூறியிருக்கிறார் மகாகவி.

தாமஸ குணமும் ரஜோ குணமும் சேர்ந்த அஞ்ஞானத்தின் முழு வடிவம் மஹிஷாசுரன். அஞ்ஞானம் துரத்தினால் ஓடி ஒளிந்துகொள்ள வேண்டியதுதான். அம்பிகையிடம் சரண் புகுந்து மெய்ஞானம் பெற்று உய்வதே உண்மையான வெற்றியல்லவா?

தேவர்கள் மும்மூர்த்திகளிடம் சரண் புகுந்தார்கள். அனைவரும் பரதேவதையான தேவியை நினைத்துப் பிரார்த்தனை செய்தார்கள். சிவபெருமானும் சக்தி தேவியைத் தியானம் செய்தார். மகிஷனிடமிருந்த கோபாவேசத்துடன் மும்மூர்த்திகளும் தேவர்களும் தியானித்தபோது எல்லாத் தேவர்களுடைய சரீரத்திலிருந்தும் அவர்களுடைய அந்தராத்மாவை இயக்குகிற சக்தியானவள் ஒளி வடிவமாக வெளிப்பட்டாள். விதம் விதமான ஒளிச் சேர்க்கைகள் ஒன்று கூடி கோடி சூர்யப் பிரகாசமான ஒளியாயிற்று. அந்தப் பேரொளி குளிர்ந்து உருவம் பெற்றுக் கருணைக் கடலான தேவி காட்சியளித்தாள்.

தேவர்களுடைய மகிழ்ச்சி கரை புரண்டோடியது. அம்பிகைக்கு நவ நவமான ஆபரணங்களை அளித்தார்கள். மாலைகளைச் சூட்டினார்கள். ஆயுதங்களை அளித்தார்கள். விஜய லட்சுமியாயிற்றே! போருக்குப் புறப்பட வாகனம் வேண்டுமே! அறத்தின் வடிவமான சிங்கத்தைப் பரிசாக அளித்தார் ஹிமவான். சிம்மத்தின் மீது ஆரோஹணித்து

# தெய்வ தரிசனம்

## ஆனந்தி

யுத்தம் செய்யக் கிளம்பி விட்டாள் தேவி. அதைக் காண்பதற்குத் தேவர்கள் கூடவே சென்றார்கள்.

யுத்தம் தொடங்கியது. தன்னந் தனியளாய், மேலும் மேலும் பெருகி வந்த அசுரப் படைகளை மாய்த்தும் அயராமல் அலுங்காமல் வீற்றிருந்தாள் தேவி.

கடைசியில் மகிஷாசுரனைக் கீழே தள்ளி அவனைப் பாத கமலத்தால் மிதித்துக் கொண்டு ஞானத்தின் சின்னமான திரிசூலத்தால் வதம் செய்தாள். மகிஷனின் சிரத்தில் நிற்கும் தேவியாக நாம் வழக்கமாகச் சிவாலயங்களில் இந்தத் துர்க்கையைக் காண்கிறோம்.

ஓர் அபூர்வ அழகுள்ள துர்க்கையம்மனைக் கும்பகோணத்துக்கு அருகிலுள்ள அம்மன்குடி சிவாலயத்தில் காணலாம்.

இந்தத் தலத்தின் புராணம் அஷ்டபுஜ துர்க்கையாக விளங்கும் மகிஷாசுர மர்த்தனியை நாயகியாகக் கொண்டிருக்கிறது.

அம்பிகை கன்னிகையாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்தபோது தேவியின் லாவண்யத்தைக் கண்டு கிறங்கிய மகிஷன் அவளை மணக்க விரும்பினான். கடைசியில் அவன் கேட்ட வரத்தின்படி கன்னிகையின் கையால் மாண்டான். மகிஷனை வதம் செய்தபோது சிவ பக்தனான மகிஷாசுரனின் ஆத்ம லிங்கத்தின் மீது திரிசூலம் பட்டதால் தேவிக்கு சிவாபராத தோஷமும் கஸ்ரஹத்தி தோஷமும் ஏற்பட்டது. நாரத முனிவர் ஈசுவரிக்கு இந்த தோஷ நிவர்த்திக்கு வழி சொன்னார். அவர் கூறியபடி தேவி காவிரி தீரத்தில் உள்ள இந்தத் தலத்துக்கு வந்து கடுந் தவமிருந்து தோஷங்கள் நீங்கப்பெற்றதாகக் கதை. கோவிலுக்கு அருகில் உள்ள பாப விமோசன தீர்த்தத்தில் அம்பிகை தன் வாளைக் கழுவ அது புதுப்பொலிவுற்றது.

ஆலயத்தைப் பார்க்கும்போதே அடடா! ஆயிரம் ஆண்டு வரலாற்றுப் பெருமை பெற்ற இந்தக் கோவில் இப்படிச் சிதிலமடைந்திருக்கிறதே என்று வருத்தமாக இருக்கிறது. மதில்கள் இடிந்து சிதைந்திருப்பதைக் காண்கிறோம்.

வறண்ட கோடைக் காலத்திலும் வற்றி விடாமல் நீல நிற நீர்ப் பரப்புடன் கண்களுக்குக் குளுமை தரும் தீர்த்தம், படித்துறை இல்லாத தடாகம், பசுமையான மரங்களும், தண்ணீரில் பிரதிபலிக்கும் நிழல்களும், பல வளைவுகளுடன் காணப்படும் இயற்கையான கரையும், தண்ணீரின் மேல் பரப்பில் நீல மணி போலப் பறக்கும் மீன் கொத்தியும் கண்களைக் கவருகின்றன.

கோவிலுக்குள்ளே நுழைவதற்கு முன்னால் ஸ்ரீ துர்க்கை விநாயகரைத் தரிசிக்கிறோம். நாக யக்ஞ பூஷ தரம் நாதலயாநந்த கரம். ஸ்ரீ கணநாதம் பஜரே. நாதத்தில் லயித்து லயத்தில் களிக்கும் கணநாதருக்குத் தனி சந்நிதி. தலையில் குட்டிக் கொண்டு ''இந்தக் குட்டிச்சுவர்கள் நெடு மதில்களாகும்படி அருள் புரியுங்கள்'' என்று பிரார்த்தனை செய்துவிட்டு உள்ளே சென்றால் இடதுபுறம் முதலில் துர்க்கையம்மன் சந்நிதி. அஷ்டபுஜ துர்க்கை. செவ்வாய்க் கிழமையாதலால் விசேஷ அலங்காரங்களுடன் காட்சிதருகிறாள். மல்லிகை மலர்ச் சரங்கள் தேவியை அழகு செய்கின்றன. நறு மணம் கமழ்கிறது.

துர்க்கையம்மனின் திருவுருவங்கள் ஒன்றுக்கு இரண்டாகக் காணப்படுகின்றன. ஆராதிக்கப்படும் துர்க்கையம்மனுடைய திருவுருவம் அலாதியான கம்பீரத்துடன் திகழ்கிறது. மகிஷத்தின் உடலும் நரனின் தலையும் உடைய அசுரனைத் திரிசூலத்தால் சம்ஹரிக்கும் கோலம். வலது புறத்தில் ஆக்ரோஷத்துடன் தலையைத் திருப்பிப் பார்க்கும்

○ அம்மன்குடி கோயில்



சிம்மம். துர்க்கா தேவி மகிஷனுக்கு அருள் புரிகிறாளா! வதம் செய்கிறாளா? வலது கரத்தால் வதம் செய்யும்போதே மகிஷனின் சிரத்தில் வரம் தரும் கரத்தை வைத்திருக்கிறாள். அது அனுக்கிரகமாகவே தெரிகிறது. ஞான வடிவான திரிசூலம் மேனியைத் தொட்ட உடனேயே மகிஷம் கூடத் தேவ வடிவம் பெற்று விடுமோ என்று அதிசயிக்கிறோம். தேவியின் பரம கருணை என்னதான் செய்யாது! மகிஷன் அதிர்ஷ்ட சாலிதான்!

முக மண்டபத்தில் உள்ள துர்க்கா தேவியின் உத்ஸவ விக்கிரஹம் கருத்தைக் கவர்கிறது. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு துர்க்கா தேவியை ஆராதித்து வந்த ஸ்ரீ வைத்தியநாத குருக்கள் என்பவர் இந்தப் படிமத்தை வார்க்கச் செய்தாராம். மிகவும் அபூர்வமான விக்கிரகம். மூல விக்ரகத்தைப் போலவே அமைப்பு.

தமிழ் நாட்டில் வெற்றி தரும் தெய்வமாகத் துர்க்கையம்மனைப் பூஜிக்கும் வழக்கம் வெகு காலமாகவே இருந்து வந்திருக்கிறது. சோழ சாம்ராஜ்யம் கொடி கட்டிப் பறந்த நாளில் இந்த வழிபாடு வேரூன்றியிருக்கிறது.

வெற்றி பெற்ற நாட்டிலிருந்து தெய்வ வடிவங்களைக் கொண்டு வந்து கோயில் கட்டுவது 'சிறுத்தொண்டர்' காலத்திலேயே ஏற்பட்ட வழக்கம் என்பதை நாம் அறிவோம். வாதாபியை வென்று திரும்பிய பிறகு பல்லவ சேனாதிபதியாக இருந்த பரஞ்சோதி வாதாபி கணபதியைத் தம்முடைய ஊரான திருச்செங்காட்டாங்குடியில் பிரதிஷ்டை செய்து கோவில் கட்டியது எல்லோரும் அறிந்த வரலாறு.

அதேபோல, இந்த அஷ்ட புஜதுர்க்கையின் அமைப்பு கீழைச் சாளுக்கிய நாட்டுப் பாணி என்றும் கிருஷ்ணா, கோதாவரி தீரத்தில் பரவியிருந்த சளுக்க நாட்டிலிருந்து இந்த அம்மன் கொண்டு வரப் பட்டிருக்க வேண்டும் என்றும் 12ம் நூற்றாண்டில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கக் கூடுமென்றும் திரு என். சேதுராமன் அவர்கள் அபிப்பிராயம் தெரிவித்தார். தென்னகத்துக் கோவில்களில் காணப்படும் கல்வெட்டுக்களை யெல்லாம் மிக ஆர்வத்துடன் ஆராய்ந்து பல தமிழ் நாட்டுச் சரித்திர நூல்களை எழுதியுள்ள இவர் தருந்த ஆதாரங்களுடன் கல்வெட்டுக்களில் உள்ள விஷயங்களை எடுத்துக் கூறுவது மிகவும் சுவையாக இருக்கிறது.

அஷ்டபுஜ துர்க்கா பரமேச்வரியைத் தரிசித்த பிறகு கைலாஸ நாதரைத் தரிசிக்கிறோம். வழிபாடு செய்ய வருபவர்கள் துர்க்கையம்மனுக்கே அர்ச்சனை செய்து பிரார்த்திக்கிறார்கள். இதனாலேயே இந்த ஊருக்கு அம்மன்குடி என்று பெயர்.

அருள் மிகு கைலாஸ நாதரையும் பார்வதி தேவியையும் துர்க்கையம்மனே பிரதிஷ்டை செய்து வழிபட்டதாக ஐதிகம். முக மண்டலத்தில் சில அபூர்வ செப்புச் சிலைகள். எல்லாம் மிகப் பழமையானவை என்று கோவிலில் அர்ச்சகராக இருக்கும் வயது முதிர்ந்த குருக்கள் கூறினார். இந்தக் கோவில் புனருத்தாரணம் செய்து கோபுரங்களுடன் பொலிவதைத் தன் கண்களால் காணவேண்டும் என்பது அவருடைய ஆசை என்று தெரிந்தது. சில ஆசைகளைப் போற்ற வேண்டியவர்களாக இருக்கிறோம். வாழ்நாள் முழுவதும் தெய்வ கைங்கரியத்திலேயே ஈடுபட்டவர். இவருடைய முன்னோர்களும் இதே கோவிலில் கைங்கரியம் செய்தவர்கள். புண்ணிய பரம்பரை.

பார்வதி தேவியின் கருவறையின் மேலே ஒரு பெரிய துவாரம் காணப்படுகிறது. ராஜ ராஜேச்வரம் என்ற பெயருடைய கோவில் அல்லவா இது என்ற எண்ணம் தோன்றுகிறது. சாந்தமும் அமைதியும் குடிகொண்டு விளங்கும் அன்னையின் எழில் முகம் மனத்துக்கு ஒரு இதத்தைத் தருகிறது.

இந்தக் கோயிலில் ஒன்பது கோள்கள் இல்லை. சூரிய பகவானையும் சனீச்வர பகவானையும் தரிசிக்கலாம். எல்லாக் கோள்களுக்குமே தலைவியாக விளங்கும் துர்க்கையம்மனை வணங்கினாலே நவக்கிரகங்களும் அருள் சொரிந்து விடுவார்கள்.

தேவர்கள் அனைவருடைய ஆத்ம சக்தியின் ஒளிப் பிழம்பில் தோன்றியவளான படியால் மகிஷாசுரமர்த்தனியான அன்னையை வணங்கினால் அத்தனை தேவர்களுமே மகிழ்ச்சி யடைகிறார்கள்.

காஞ்சி முனிவரான பெரியவர்கள் அருளிய ஸ்ரீ துர்க்கா பஞ்சரத்தினத்தில் ஒரு சுலோகத்தின் பொருளைக் கருத்தில் வைத்துக் கொண்டு அன்னையை வணங்குவோம்.

''தேவி! ச்ருதி வாக்கியங்களாலே புகழப் படுகின்ற தெய்வ சக்தியும் ஆத்ம சக்தியும் நீயே! மகரிஷி மண்டலங்களுக்குப் பிரத்யக்ஷமாகிறவளும் நீயே! நீ பரம ரஹஸ்யமானவள். எங்கும் பரவியிருப்பவள். ஸர்வேச்வரி! மோக்ஷத்தைக் கொடுப்பவளே! என்னைக் காப்பாற்றுவாயாக.

மாம்பாஹி ஸர்வேச்வரி மோக்ஷதாத்ரி.

---

மனிதனுக்கு எவையெல்லாம் இன்றியமையாத தேவையோ அவற்றை இறைவன் அதிக அளவில் உலகில் படைத்திருக்கிறான். காற்று, நிலம், நீர், உணவைத் தரும் தாவரங்கள் ஆகியவை படைப்பின் பெரும் பகுதி. தங்கம், வெள்ளி போன்றவை மனிதனுக்கு இன்றியமையாத பொருள் அல்ல. அதனால் அவற்றைக் குறைந்த அளவில் படைத்துள்ளார். நிறைந்த அளவில் இறைவன் படைத்த பொருள்களைக் குறைந்த அளவு செல்வங்களுக்கு ஈடாக்கி மனிதன் கஷ்டப்பட்டால் அதற்கு இறைவன் பொறுப்பல்ல. கடவுளுடைய தயாள குணத்திற்கு அவர் படைப்பின் ரகசியங்களே அத்தாட்சி.

—துளசிதாஸர்

ஆர். எஸ். சுப்பிரமணியன்




○ 'இதோ நாம் செத்தோம்' என்று அவன் நினைத்த வேளையில்

**5**

**டா**மியன் தார்னுக்குத் தான் ஏமாற்றப் பட்டிருப்பது புரிந்து விட்டது. நரி குகைக்குள் பதுங்கி விட்டது. நாய்கள் குகை வாயிலைச் சூழ்ந்து குரைத்தன. அதோ ஒருவன் வருகிறான்பாதிரி உடையில் கையில் கத்தியுடன் அவன் வருவதைப் பார்க்க விசித்திரமாக இருந்தது. இப்பால் திரும்பினான். குதிரை மீது ஆரோகணித்த நிலையில் இன்னொருவன். இவனிடமும் ஒரு கத்தி! குதிரை ஒரு பாலத்தின் மீதாக நிதானமாக நடந்தது. பாலத்தின் அடியில் ஒரு காட்டாறு வெகுவேகமாகச் சுழித்துச் சென்றது.

தாமதிக்க நேரமில்லை. டாமியன்தார்ன் தனது கொடூர சக்திகளை ஒன்று திரட்டி அந்தக் குதிரையைப் பார்த்தான். அந்தப் பார்வையில் குதிரை மீது பத்துப் பதினைந்து ஓநாய்கள் பாய்ந்து, அதனைக் கடித்து, நிணத்தைக் குதறி எடுத்து, ரத்தத்தைச் சுவைப்பது போன்ற காட்சி படர்ந்தது. குதிரை மேலே நகராமல் நின்றது. அன்டோனியோ என்னதான் உந்தியும் அது மேலே நகரவில்லை. ஏதோ அதிபயங்கரத்தை, வேதனையை உணர்ந்தாற்போல அது உடல் சிலிர்த்து, திடீரென்று முன்னங்கால்களை உயர்த்திக் கனைத்தது. அன்டோனியோ நிலை தடுமாறி விழுந்தான். பாலத்தின் சுவரை ஒருகணம் அவன் உடல் தாக்கியது. அடுத்தகணம் அவன் ஆற்றுச் சுழலில் வீழ்ந்தான்.

'விஷ்' என்ற சத்தம் ஓரிரு விநாடிகளில் அடங்கிப் போயிற்று.

டாமியன் சரேலென்று திரும்பினான். மற்றொரு இளம் பாதிரி ஏதொன்றும் புரியாத பிரமிப்பிலும் கலவரத்திலும் விறைப்பதைப் பார்த்தான். ஆனால் சைமன் கரத்தில் கத்தி இருந்தது. பிரமிப்பிலிருந்து மீண்டதும் அவன் பாய்வான்.

டாமியன் நகரவில்லை. தன் நாய்களிலேயே மிகப் பெரிதான ஒன்றிடம் தன் பார்வையைச் செலுத்தினான். நிலைகுத்தி நின்ற அந்த நோக்கில் அசுர சக்தி பாய்ந்தது. அந்த நாய் திடீரென்று சைமன் மீது தாவியது. அவன் கழுத்தைக் கவ்வ முயன்று உடையைக் கிழித்தது. அடுத்த கணம் இன்னொரு நாய் அவன் மீது விழுந்து பிடுங்கியது. மூன்று.... நான்கு... நாய்கள். சைமன் வீரமுடன் போராடினான். மூச்சு அடங்கும் வரை, கடைசியாக ஒரு நாய் அவன் கழுத்தைக் கவ்விக்குருதியை சர்க்கும் வரை விட்டுக் கொடுக்கவில்லை அவன். சைமனின் இந்தப் போராட்டத்துக்கு எத்தனை நேரம் ஆயிற்று என்று பார்த்தான் டாமியன் தார்ன். சரியாக ஒன்றரை நிமிடங்கள்!

* * *

**சை**த்தானின் மகனால் அழைக்கப்பட்ட பக்தர்கள் ஓரிடத்தில் கூடி அவனது கட்டளைகளைப் பெற்றுத் திரும்பினார்கள். தங்கள் கோர கிருத்தியத்தை நிறைவேற்றிக்

கொண்டிருந்தார்கள். நாடெங்கிலும் பல குழந்தைகள் திடீர் திடீரென்று இறந்த செய்திகள் கிடைத்துப் போலீஸார் என்ன செய்வது என்று புரியாமல் திணறினார்கள். டி. வி.யில் பி.பி.ஸி. செய்தி படித்த கேட், இந்தப் பயங்கரத்தைப் பற்றிக் கூறி, பெற்றோர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டியதை வலியுறுத்தினாள். ''குழந்தைகள் மடிந்தது தொற்று நோயினால் அல்ல; கொடுமையான பலவிதங்களில் அவை கொல்லப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது....''

ஹார்வி டீன் அன்றிரவு வீடு திரும்பிய போது அவன் மனைவி பார்பரா டீ. வி. செய்தி கேட்டுக் கொண்டிருந்தாள். அவன் அவளை அணுகிய போது மடியிலிருந்த குழந்தையை இறுக அணைத்துக் கொண்டாள். ''கிட்ட வராதேடா கொலைகாரா!'' என்று கத்தினாள்.

''என்ன உளறுகிறாய்?'' என்றான்.

''உளறவில்லை. இன்று மாலை ஒரு பாதிரி வந்தார். டாமியன்தார்ன் பற்றி என்னை எச்சரித்தார். அந்தச் சைத்தான் மகனுடைய ஆளுமைக்கு நீ ஆட்பட்டிருக்கிறாய்! நம் குழந்தையையே கூட நீ கொன்று விடுவாய்!''

''யாரோ பைத்தியக்காரன் ஏதோ சொன்னானென்று....''

''அவன் பைத்தியமும் இல்லை; நான் சொல்வது பொய்யும் இல்லை! எனக்கு நிரூபணம் கிடைத்திருக்கிறது. உன் மேஜை இழுப்பறையில் நீ கொன்ற, கொல்லப் போகிற குழந்தைகளின் பிறப்புச் சான்றிதழ்கள்....'' மேஜை மீதிருந்த ஒரு கத்தை சான்றிதழ் நகல்களை எடுத்து அவன் முன் வீசினாள்.

பார்பரா எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் பயனில்லை. அவள் தன் கணவனிடமிருந்து தங்கள் குழந்தையைக் காப்பாற்ற நினைத்தாள். ஆனால் டாமியன் ஏவிவிட்ட நாய் இரவோடு இரவாக வருமென்று அவள் எதிர்பார்க்கவில்லை....

---

இரயில்வே சீஸன் டிக்கட்டு வாங்க முன்பு ஒரு ஃபோட்டோ கேட்டார்கள். இப்போது இரண்டு ஃபோட்டோ வேண்டும் என்கிறார்கள். ஒரு ஃபோட்டோவைக் கனமான நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி வைத்துக் கொள்கிறார்களாம்! எதற்கு? பெண், மாப்பிள்ளை பார்க்கவா?

—ஸ்ரீரங்கம் ரா. ராகவன்



குழந்தையை இழந்த தாங்க முடியாத துக்கத்தில் அவள் தன் கணவன் ஹார்வி டீனைப் பழுக்கக் காய்ந்திருந்த மின்சார இஸ்திரிப் பெட்டியால் தாக்கினாள். பிறகு குணப்படுத்த முடியாத அளவில் பைத்தியம் பிடித்தவளாக அமர்ந்து தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள்.

* * *

**ப**கார்லோ கூறியவற்றை கேட் நம்பவில்லை; ஆனால் நம்பாமல் இருக்கவும் அவளால் முடியவில்லை. டாமியன் தார்னிடம் உள்ள ஒரு வசீகரம் சாமானிய மானுட சக்திகளுக்கு அப்பாற்பட்டதென்பது போல் அவளுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. அந்தப் பாதிரியை அனுப்பிவிட்டு அவள் பி. பி. ஸி. யின் நூலகத்துக்குச் சென்று ரொம்பப் பழைய நாளிதழ்களின் 'மைக்ரோ ஃபிலிம்'களை ஆராய்ந்தாள். டாமியன் பிறந்த தினத்திலிருந்து அவன் குடும்பத்திலும் சரி, அக்குடும்பத்துடன் நட்பால் பிணைக்கப்பட்டிருந்த வேறு பல இல்லங்களிலும் சரி, பல மரணங்கள்.... எல்லாம் கோரமானவை.... விபத்துக்கள், தற்கொலைகள், குறைப் பிரசவங்கள் என்றிப்படி....

அவளுக்குச் சந்தேகங்கள் உறுதிப்பட்டன. என்றாலும் டாமியன் தார்னிடம் இருந்த கவர்ச்சியை அவளால் ஒதுக்க முடியவில்லை. தனது கிராமப்புற வீட்டில் அவளை டாமியன் சந்திக்க விரும்புவதாக ஃபோனில் செய்தி கிடைத்தபோது அவள் மறுக்காது சென்றாள்.

அந்தக் கிராமப்புற மாளிகை ஓர் ஓடைக் கரையில் கட்டப்பட்டிருந்தது. தோட்டத்தையும் ஆற்றையும் அவளுக்குச் சுற்றிக் காண்பிக்க அழைத்துப் போனான் தார்ன். ஓடை மீதாக ஒரு மரப்பாலம். அதைக் கடக்கும் போது ''அதோ பார்!'' என்றான். ஒரு பெரிய மீன் துள்ளியது. பாலத்தின் மரக்கைப்பிடியைப் பற்றி அதன் மீது சாய்ந்த வாக்கில் அவள் பார்த்தாள். உளுத்துப் போயிருந்ததோ என்னமோ, மளமளவென்று கைப்பிடிச்சுவர் முறிய, கேட் நீரில் விழுந்தாள். ஓடையில் காட்டாற்று வெள்ளம் பெருகிற்று. 'இதோ நாம் செத்தோம்' என்று அவள் நினைத்த வேளையில் டாமியன் கைகொடுத்தான். பற்றிக் கொண்ட அவளைக் கரை சேர்த்தான். வீட்டுக்குள் அழைத்துப் போய் ஈர உடையைக் களையச் செய்து மாற்றுடை தந்தான். அவன் பார்வை அவளைத் துளைக்க, அவன் கரகரப்பான குரலில் சொன்னான்: ''டாமியன் எனக்கு நீ வேண்டும்! என்னை ஏற்றுக் கொண்டு, உன்னைத் தா!''

அன்றைக்கு அவள் வலி வேதனைகளின் உச்சகட்டத்தை அடைந்து சித்திரவதைப் பட்டாள். ஆனால் அவனுடைய ஆளுமையில் அந்த வேதனை மிக்க விகாரங்களை வரவேற்கவும் செய்தாள்.

* * *

பாதிரி டிகார்லோ, மறுபடி சைத்தானின் மகனைப் பற்றிப் பேசப்பேச.....

''போதும் நிறுத்துங்கள்'' என்றாள் கேட். ''எனக்குத் தெரிந்த வரைபோதும். அவன் சைத்தானின் மகன் என்பதில் எனக்குச் சந்தேகம் ஏதுமில்லை. என் மகனை அவனிடம் சிறைப்பட்டுத் தவிக்கும் போது எனக்குப் புதிய நிரூபணங்கள் எதற்கு?''

''அப்படியானால் கடவுளின் மகனின் மறு அவதாரம் பற்றிக் கூறுகிறேன்'' என்றார் டிகார்லோ. ''அவர் அவதரித்திருப்பது எங்கே தெரியுமா? நாடோடிகள் மத்தியில்! நாடோடிகளுக்குப் பிறப்புச் சான்றிதழ்கள் ஏது? அங்கேதான் டாமியன் ஏமாந்து போனான். ரிஜிஸ்டிரார் அலுவலகத்தில் பிறப்புச் சான்றிதழ்களை நகல் எடுத்து அந்த அடிப்படையில் பல குழந்தைகளைக் கொன்று.... என்ன பயன்?''

''எப்படியோ நம்முடைய இந்தத் திட்டமாவது வெற்றி பெற்றால் சரி'' என்றாள் கேட். ''இதுவே இறுதிப் போராட்டமாக இருக்கட்டும்.''

* * *

கேட் காரைவிட்டுஇறங்கிஉள்ளேசென்றபோது அந்த மாதா கோயில் இருட்டில் ஆழ்ந்திருந்தது. பீட்டரை இறுகப் பற்றிக் கொண்டிருந்தான் டாமியன் தார்ன். ''எங்கே அவன்? சொல்லு! எங்கே பிறந்திருக்கிறான்?''

''என் மகனை என்னிடம் கொடு; அவனிருக்கும் இடத்துக்கு அழைத்துப் போகிறேன்'' என்றாள் கேட்.

''அவனை நம்பாதே'' என்றான் பீட்டர், டாமியனின் பூரண ஆளுமைக்கு அடிமைப் பட்டுப் போன அவன். ''நான் அவன் மகன் அல்ல; உன் மகன்! அவன் உன்னை ஏமாற்றி விடுவான்'' என்றான்.

கேட்டுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. ''வா, அழைத்துப் போகிறேன்'' என்றாள். ''ஏசுவின் மறு அவதாரத்தை உனக்குச் சுட்டிக் காட்டிவிட்டால் என் மகனை விடுவித்து விடுவாய் அல்லவா?''

''ஆகட்டும்'' என்றான் டாமியன்.

* * *

ஒரு குன்றின் உச்சியில் கட்டப்பட்டு இன்று இடிபாடடைந்து விட்ட ஒரு மாதா கோயிலுக்கு முன் கேட் காரை நிறுத்தினாள். ''பீட்டர் காரிலேயே இருக்கட்டும்; நாம் போவோம்'' என்றாள்.

''முடியாது. பீட்டர் என்னுடன் வருகிறான்'' என்றான் டாமியன்.

''அவனை நம்பாதே! என்னையும் அழைத்துப் போ!'' என்றான் பீட்டர்.

மாதா கோவில் வாசலில் நின்றாள் கேட். ''உள்ளேதான் அவதாரம் நடந்திருக்கிறது'' என்றாள்.

''கதவைத் திற'' என்றான் டாமியன். கேட் திறந்தாள். உள்ளே டிகார்லோ

நண்பர்: ''ஏன் ஸார்! நீங்க நாட்டுப் பாடல்களையே எழுதறீங்களே?''

பாடலாசிரியர்: ''நாட்டுப்பாடல்களைக் காப்பியடிச்சாத்தான் எவனும் கேஸ் போட மாட்டான்.''

—செந்தமிழ்ச் செல்வன்



தூணுக்குப் பின் நிழலாக மறைவதைப் பார்த்தான். அவன் கரத்தில் கத்தி பளபளத்தது.

டாமியன் முன்னேறினான், பீட்டரைப் பற்றி இழுத்தபடி. டாமியனைக் கண்ட டிகார்லோ பாய்ந்தான். ''வேண்டாம்! வேண்டாம்!'' என்று அலறினாள் கேட். ஆனால் அதற்குள் டாமியன் பீட்டரைத் தனக்கு முன் இழுத்துக் கவசமாக்கிக் கொள்ள, பாய்ந்து வந்த பாதிரி தன் வேகத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தவிக்க, கத்தி பீட்டரின் முதுகில் பாய்ந்தது.

''பீட்டர்!'' என்று அலறினாள் கேட். பீட்டர் தரையில் சரிந்து, மிருகம்போல் துவழ்ந்தான். முதுகில் கத்தி நீட்டிக் கொண்டு பளபளத்தது. ''என் அப்பெல்லா: உனக்குத்தான்... உனக்கேதான் டாமியன்'' என்றான். சரிந்தான்.

அந்தச் சொற்கள் அவள் காதில்ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போல் வேதனை தந்தன. அடுத்த கணத்தில் அவள் ஆவேசத்தோடு அந்தக் கத்தியைப் பிடுங்கி எடுத்தாள். இப்பால் பாதிரி டிகார்லோவை மண்டியிடச் செய்து அவர் கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தான் டாமியன். பின்புறம் பாய்ந்து வரும் கேட் அவன் கவனத்தைக் கவரவில்லை. அவள் கரத்தில் பற்றியிருந்த கத்தி அவன் முதுகில் பாய்ந்தது. ஆழமாக, அழுத்தமாகப் பாய்ந்தது.

ஒருகணம் உடலை ஒடித்து நிமிர்ந்து நின்றான் சைத்தானின் மகன் டாமியன். ''இறைவனின் மகனே நீ எங்கிருக்கிறாய்?'' என்று அலறிக் கேட்டான். அடுத்த கணம் மடிந்து சுருண்டு விழுந்தான்.

அவன் கேள்விக்குப் பதில் அளிப்பது போல, அந்தக் கட்டிடத்தின் மூலையில் ஒரு ஒளிவட்டம் திரண்டு கணத்துக்குக் கணம் பிரகாசமடைந்து வந்தது.

**ஆங்கில மூலம்: கார்டன் மக்கில்**

**தமிழ் வடிவம்: த. மூ. ரா.**

# நல்ல உடல்
# நீங்கள் நம்பலாம்.



# ஆரோக்கியத்துக்கு

அம்மாக்களுக்கும் அப்பாக்களுக்கும் குழந்தைகளுக்கும தாத்தாக்களுக்கும் ஹார்லிக்ஸ் அனைவருக்கும் நல்லது. ஏனெனில் ஹார்லிக்ஸ் ஒவ்வொரு நாளும் நல்ல உடல் ஆரோக்கியத்தை அளிக்கிறது.

அதனால்தான் லட்சக்கணக்கான மக்கள் 100 ஆண்டுகளுக்கு மேலாக ஹார்லிக்ஸின் நற்பயனில் நம்பிக்கை வைத்து வருகிறார்கள்.

உலகெங்கிலுமுள்ள டாக்டர்கள் உடல் ஆரோக்கியத்துக்கு உகந்த உத்தரவாதமென்று சிபாரிசு செய்கிறார்கள்.

அதனால் ஆச்சரியமில்லை. ஹார்லிக்ஸின் சத்துள்ள, சுத்தமான பொருள்கள் சிறப்பானதொரு முறையில் ஒன்றிணைந்து அவற்றின் நற்பயனும் எளிதாக சீரணிக்கும் இயல்பும் நீடிக்கின்றன.

ஹார்லிக்ஸை உங்கள் குடும்ப வாழ்க்கையின் ஓர் இன்றியமையாத அம்சமாக்கிக் கொள்ளுங்கள். அதன் நற்பயனில் நீங்கள் நம்பிக்கை வைக்கலாம்.




HTD-HMM-7678 TAM

**முழுமையான ஊட்டம் பெற**

"ஒன்னரைக் காரட்டு வைரமும், நாப்பது சவரன் நகையும் ஏற்கனவே இருக்காம். அது தவிர...'' முகத்தை அகலமாக்கிக் கொண்டு அவசரமாக அம்மா சொல்லிக் கொண்டிருக்கும்போது அவன் நுழைந்தான்.

''வாடா அம்பி! சரியான சமயத்துக்கு வந்தே!''

''அவனை அம்பின்னு கூப்பிடாதேன்னு நோக்கு எத்தனை தரம் சொல்றது? முழுசா ராம்னு பேர் வச்சது முழுங்கி ஜீரணம் பண்ணவா?'' அப்பா சீறினார்.

''இந்த ஃபோட்டோவைப் பார் ராம்!'' அப்பா கொடுத்ததை வாங்கிப் பார்த்தான்.

''என்ன இதுக்கு?''

''பிடிச்சிருக்கா சொல்லு!''

''.......''

''படிச்ச பொண்ணு. செமத்தியா பணப் புழக்கம், எக்கச்சக்கமா நகை, நீ மட்டும் தலையசைச்சா லக்ஷ்மி தேவியே இந்த வீட்டுக்கு வந்த மாதிரிதான்.''

ஆசையில் அப்பாவின் முகம் விகாரமாக இருந்தது. அம்மாவின் கண்களில் வரப் போகும் பணக்கார மாட்டுப் பெண்ணைப் பத்திய கனவு ஒட்டிக் கொண்டிருந்தது. பின் தாலி முடியப் போகும் நாத்தனார் இமிரை இப்போதே முகத்தில் பூசிக் கொண்டிருந்தாள் மாலா.

''வேறென்னெல்லாம் செய்வாளாம்?''

''அடி சக்கை! ''உற்சாகமாகக் கூறினார் அப்பா. ''எஃப்.டி.ல பத்தாயிரம் பொண்ணு பேர்லே போடறாளாம். உனக்கு டிரஸ்ஸுக்குத் தனியா இரண்டாயிரமும், கையில ரொக்கமா பத்தும் தர்றாளாம். ஸ்கூட்டர் வேணும்னாலும் இப்பவே சொல்லிக்கோ.''

''அப்புறம்...?''

''நீ என்ன சொல்றே?'' அம்மா புரியாமல் விழித்தாள்.

டைரியில் வைத்திருந்த ஒரு புகைப் படத்தை எடுத்து அம்மாவிடம் நீட்டினான்.

''யார் இந்தப் பொண்ணு? பார்க்க லட்சணமாத்தான் இருக்கா. அந்தஸ்து என்னவோ?''

''பேர் தங்கம்.''

''.....''

''குணம் சொக்கத் தங்கம்.''

''.....''

''இவளோட அப்பா ஈரத் துணியை அடி வயத்துல இறுக்கிக் கட்டிண்டு இருக்கிற ஈஸ்வரன் கோவில் குருக்கள்.''

''ராம் நீ என்ன சொல்றே?''

''தாலிக்குக் கூடத் தங்கம் தர அவருக்கு வசதி இல்லை. அதுனால தங்கத்துக்குத் தாலி தர நான் தீர்மானம் செஞ்சாச்சு. நாளைக்கு அவாத்துக்குப் போறோம். ரெடியா இருங்கோ.'' பதிலை எதிர்பாராமல் உள்ளே போய்விட்டான்.

''என்ன இது அக்கிரமமா இருக்கு? நான் ஒரு நாளும் இதுக்குச் சம்மதிக்க மாட்டேன்'' அம்மா பெரிதாகக் குரலெடுத்து அலறினாள்.



''என்ன செய்யப் போறே?'' — அப்பா.

''அவளை இங்க வரவிட மாட்டேன். மாட்டைக் கட்டறதுக்குத் தொழுவம் போறும். மாளிகை அவசியமில்லே.''

''உன் பிள்ளையைப் பத்தி உனக்கு நன்னாத் தெரியும். அவனுக்கு எப்பவுமே ஒரே சொல் தான். அவ இங்கே வரவேண்ணா அவன் அங்கே போயிருவான்.''

''போகட்டும்!'' — வீம்பாக வார்த்தையைத் துப்பினாள் அம்மா.

''மங்கள், அறிவிருக்கா உனக்கு? உன் பிள்ளை இருக்கிறவரைக்கும்தாண்டி இது மாளிகை. அவன் போயிட்டா மாட்டுத் தொழுவம் ஆயிடும். அவனை விட்டா

# ஆரம்பம்

-தேவிபாலா-



நாளைக்கு அடுப்புல பூனை தூங்கும்மா. அவசரப்பட்டுக் உளறிடாதே!''

''என்ன செய்யச் சொல்றேள்?''

''ஒப்புக்கறதைத் தவிர வேறு வழியே இல்லே.''

''அன்னிக்கு நர்றீதேவியை வேண்டாம்னு சொல்லிட்டு யாரோ ஒரு மூதேவியை அனுமதிக்கிறதா?'' அம்மா அழத் தொடங்கினாள்.

அப்பாவுக்கும் நெஞ்சுக்குள் வெப்ப அலை பரவியது.

மாலா மலங்க மலங்க விழித்தாள்.

நமஸ்கரித்து எழுந்த தங்கத்தை விரோதத்துடன் பார்த்தார்கள்.

''தங்கம்! எங்கப்பாவும் அம்மாவும் என் ஆசைக்கு எப்பவுமே மறுப்புத் தெரிவிச்சதில்லே. கட்டின புடவையோட உன்னைக் கூட்டிண்டு வர நான் அனுமதி கேட்டப்ப மறுப்பே சொல்லலே. என் கல்யாணத்தை ஒரு லட்சியம், ஒரு புரட்சினு ஊர் பாராட்டினாலும் அதுக்கு உண்டான பெருமையெல்லாம் இவாளைச் சேரும்.''

தங்கத்தை நெருங்கி, கன்னத்தை வழித்துச் சொடுக்கு விட்டாள் அம்மா. ''மூக்கும் முழியுமா ஒளியாட்டம்! அவனுக்கு என்னடா குறைச்சல்? உள்ளே வாடி என் ராஜாத்தி.''

(ஒரு கை பாக்கறேன் ஒன்னை. மூளிக் கழுத்தும், மூதேவி மூஞ்சியுமா வந்திருக்கிற அன்னக் காவடிப் பொணமே!)

சாப்பாடு முடிந்து ராம் யாரையோ பார்க்க வெளியே போய் விட்டான்.

''அம்மா, நீங்க நான் கொண்டு வந்த அதிரசத்தைச் சாப்பிடவே யில்லே!'' ஆசையோடு நீட்டினாள் தங்கம்.

''அய்யோ அதைத் தொடாதே. விஷம் கிஷம் கலந்திருக்கப் போறு'' மாலா அலறினாள்.

''மாலா என்ன இது?'' தங்கம்.

''எண்டி எவ்வளவு திமிர் இருந்தா எம் புள்ளையைக் கைக்குள்ளே போட்டுண்டு இருப்பே?''

''அம்மா, நீங்க பேசறது எனக்குப் புரியலே.''

''புரிய வைக்கிறேன். என்னெல்லாம் கோட்டை கட்டினேன். ஊரே மூக்குல விரல் வைக்கும்படியா என் ஒரே பிள்ளைக்குக் கல்யாணம் நடத்த ஆசைப்பட்டேனே. இப்படி ஒரு அக்கிரிப் பெண்ணாலே அத்தனையும் தொறுங்கிப் போச்சே.''

''அம்மா அவரை யாரும் நிர்ப்பந்திக்கலே!''

''எதைக் காமிச்சு அவனே ஏமாத்தினே? லட்சுமணன் செய்ததை நானும் இப்பச் செய்யணும். அப்பத்தான் அவனோட மோகம் அடங்கும். வைரத் தோட்டுக்கு ஆசைப்பட்டேன். கடைசில ரவை கூட இல்லாமப் போச்சு.''

''அம்மா, அண்ணு வர்ருன்!'' மாலா இசுகிசுத்தாள்.

''உம் பொண்டாட்டி ரொம்ப மோசம் ராம்!''

''ஏம்மா?''

''பின்ன என்ன? என் நகைகளை யெல்லாம் போட்டு அழகுபார்க்க நான் ஆசைப்பட்டா மாட்டேங்குறு.'' வாஞ்சையோடு தங்கத்தின் தலையைக் கோதி விட்டான்.

ராம் பூரித்துப் போனுன்.

இருட்டு மெல்லப் பிரிந்து, சன்னமான வெளிச்சம் பரவிக் கொண்டிருந்தது.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள் தங்கம். 'பாலுக்கு நேரமாச்சே!'

உடம்பு கெஞ்சியது. தலே பாரமாகக் கனத்தது. வாசலே நெருங்குவதற்குள் கண்ணை இருட்டிக் கொண்டு வர, பூமியில் கால் பதியாமல், எல்லாமே மசமசப்பாக மாறி நினைவை மெல்ல இழந்தாள்.

''**கோ**வமா?''

பேசாமல் இருந்த கணவனை உலுக்கினுள்.

''இல்லேயா பின்னே? நீசெய்யறது உனக்கே சரியா இருக்கா? முடியாமப் போனு வேற யாராவது பால் வாங்கப் போக மாட்டோமா? நீ வாசல்ல விழுந்து, அதை அக்கம் பக்கம் பார்த்து அம்மாவுக்கு எவ்வளவு வேதனை தெரியுமா? இது அவசியந்தானு!''

''பால் வாங்க நாந்தானே போகணும்!''

''அப்படி ஏதாவது சட்டமா? ஒரு நாள் போலேன்னு உன்னேக் கூண்டில நிறுத்தப் போருளாக்கும். ஏன் இது மாதிரி நடந்துக்கறே?''

மெதுவாக விசும்பினுள்.

டாக்ஸி டிரைவர்: வண்டி பிரேக் பிடிக்க மாட்டேங்கிறது. என்ன செய்ய?

பயணி: போனுப் போவுது. ஓடுகின்ற மீட்டரையாவது நிறுத்துய்யா!

—த. செந்தமிழ்ச் செல்வன்



''ஒண்ணு சொல்லப்படாதே! உடனே ரோஷம் பொத்துண்டு வந்துடுமே!''

''நான் சொல்ல வேண்டாம்னு நெனைக்கறேன். முடியலே. வர வர உங்கம்மா...''

அவனது பார்வையில் கனல் பறந்தது.

''எங்கம்மா...? கமான்! சொல்ல வந்ததைச் சொல்லு.''

''**இ**து மூணுவது தரம். உன்னேக் கண்ணுக்குள்ள வச்சு பொத்திப் பொத்திக் காப்பாத்தற எங்கம்மா மேல என்ன துவேஷம் உனக்கு?''

'அத்தனையும் வேஷம்!' — சொல்ல நினைந்து அவனது கோபத்தில் அடங்கிப் போனுன்.

''லுக்! இது உனக்குக் கடைசி எச்சரிக்கை. எங்கப்பா, அம்மாவைப் பத்தி புகார் சொல்ல நீ முயற்சிசெய்யறதுஇதுவேகடைசித் தரமா இருக்கட்டும். நாதி இல்லாத உனக்கு வாழ்வு தர நா வந்தப்ப, அதைத் தடுக்காம, சந்தோஷமா ஏத்துண்ட தெய்வங்கள். வேஷம் போட வேண்டிய அவசியம் என்னைப் பெத்த தெய்வங்களுக்கு நிச்சயமா இல்லே.''

கண்ணைக் கட்டிவிட்ட முரட்டுக் குதிரையாக ஒரே திசையில் ஓடற புரியாத புருஷன்...

சீர்திருத்தத் திருமணத்துக்குப் பின்னுல் இத்தனை பெரிய பள்ளம் இருக்குமென்று அவனுக்குத் தெரியவில்லே.

'நானே எதிர்த்தாலும் அவாளே ஆதரிக்கறது உன்னேட கடமை.''

கண்களைத் துடைத்துக் கொண்டு உள்ளே போனுன்.

''**நீ** இன்னும் புறப்படலியா?'' எரிச்சலோடு கேட்டான் ராம்.

''நான் வரலே.''

''டிக்கட் புக் பண்ணிட்டுச் சீக்கிரமே வருவேன்னு நேத்திக்கே சொன்னேனே!''

''எனக்குப் பயங்கரத் தலேவலி. மாலாவைக் கூட்டிண்டு போங்கோ.''

அப்படித்தான் அவள் சொல்ல வேண்டும். ஆர்வத்தோடுவரும் அவனேக் கட்டாயமாகத் திசை திருப்ப வேண்டும். இல்லே யென்ருல் மறுநாள் மாமியாரைச் சகித்துக்கொள்ள முடியாது.

சம்பளம் வரும் நாள்.

ஆவலோடு ஒரு பந்து மல்லிகைப் பூவும், அல்வாவும் பைக்குள் கணிசமான இடத்தை அடைத்துக்கொள்ள, ஆவலோடு வருவான் ராம். அன்று ஏராளமான ''மூடோடு'' வேறு இருப்பான்.

அம்மாவுக்கு மூக்கில் உடனே வியர்த்து விடும். உடனே ஒரு வழி செய்வாள். அவன் உள்ளே நுழைவான்.

''அம்மா...அம்மா...'' வாய் அம்மாவை அழைத்தாலும் கண்கள் தங்கத்தைத் தேடி வீடு முழுக்கச் சுழலும்.

''அரிசிஅரைக்கிறேண்டா. இடுப்பு விட்டுப் போச்சு. என்ன வேணும்?''

''நீ எதுக்கு அரைக்கறே? தங்கம் எங்கே?''

''சித்த மின்னதான் உட்கார்ந்தா. இனிமே மூணு நாளைக்கு எனக்குக் கை ஒடிஞ்ச மாதிரி தான்.'' சொல்லிவிட்டு அரைக் கண்ணுல் பிள்ளையை அளப்பாள்.

அங்கே நெருப்பு சாம்பலாகி ரேழியைக் கடந்து கொண்டிருக்கும்.

பாவம் தங்கம்!

எல்லாருக்கும் மூன்று நாள்தான் மாதத்தில். அவளுக்கு மட்டும் மாமியார் இஷ்டப்பட்டபோதெல்லாம் லீவு!

"**சா**ர் இங்க மிஸ்டர் ராமோட வீடு..?"

"இதுதான். நீங்க யாரு?" அப்பா அசுவாரசியமாகக் கேட்டார்.

"நான்அவரோடஃபேக்டரிலருந்துவர்றேன். அங்கே அவருக்கு ஆக்ஸிடெண்ட் ஆகி ஜி. ஹெச்சுக்கு...."

அப்பா துள்ளிக் குதிக்க...

அம்மா அலறிப் புடைத்துக் கொண்டு ஓடிவர,

மாலா ஒப்பாரி வைக்க....

உறைந்து போய் நின்றாள் தங்கம்.

**ஆ**யிற்று.

சந்தன மாலையை அணிந்து கொண்டு, புகைப்படச் சட்டத்துக்குள் ராம் சமாதியாகி இன்றோடு எட்டு நாள் முடிந்து விட்டது.

கதறி ஓய்ந்து விட்ட தங்கம் மூச்சு விடக் கூடத் தெம்பில்லாமல் ஒடுங்கிப் போய் விட்டாள்.

ஆளுக்கொரு மூலையைத் தேடிக் கொண்டு அவரவர் கவலையில் மூழ்கியிருக்க,

வாசலில் அந்தக் கார் வந்து நின்றது.

தங்கத்தின் அப்பா குருக்கள் நிமிர்ந்து பார்த்தபோது நாலைந்து பேர் தயங்கித் தயங்கி உள்ளே நுழைந்தார்கள்.

"இது மிஸ்டர் ராமோட...."

"எஸ். நீங்க யாரு? நாந்தான் ராமோட அப்பா."

"நான் அவரோட ஃபேக்டரி ஜி. எம்."

"ஒக்காருங்க சார்." – அப்பா பதறினார்.

"இருக்கட்டும். முதல்ல மிஸஸ் தங்கம் ராமைக் கூப்பிடுங்க. அவங்களை நான் பார்க்கணும்."

தங்கம் மெதுவாக வெளிப்பட்டாள்.

"ஸாரி மிஸஸ்ராம். நாங்களென்ன சொல்லியும் உங்க நஷ்டத்துக்குப் பரிகாரம் இல்லே. தேத்திக்குங்க ப்ளீஸ்! ஹி ஸஸ் எ ஜெம்."

"பை த பை நான்எதுக்குவந்தேன்னா..."

அத்தனை பேரும் உஷாரானார்கள்.

"அவரோட பி.எஃப்.கிராஜுவிடி எல்லாமா கிட்டத்தட்ட முப்பதாயிரம் இருக்கு."

அப்பா சுறுசுறுப்பானார். கிண்டியைமறக்க வேண்டியதில்லே என்று ஆறுதல் பட்டார்.

"ட்யூட்டில ஆக்ஸிடண்ட் ஆனதால காம்பன்சேஷன் ஐம்பதாயிரம் குடுக்கறதா தீர்மானிச்சிருக்கோம்."

அம்மா கண்களை அகலமாக விரித்துக் கணக்குப் போட்டாள்.

"அவரோட இன்ஷூரன்ஸ் தொகை முப்பதாயிரம் இருக்கு."

மாலா மனசுக்குள் நல்லியும், உம்மிடியார்ஸும் வந்து போனது.

"அது மட்டுமல்ல, உங்களுக்கு எங்க கம்பெனில வேலை போட்டுத் தர்றதா தீர்மானம் பண்ணியிருக்கோம். உங்க பேர்ல அவர் நாமிநேஷன் தந்திருக்கிறதால இந்த



ராஜீவ் காந்தி ஒரு நல்ல பைலட்டாக இருந்தார் என்று சொல்கிறார்கள். ஒரு நல்ல பைலட் எப்போதும் விமான நிலையத்திலுள்ள 'கண்ட்ரோல் டவரை' சார்ந்தே இருப்பார். டவர் இறங்கச் சொன்னால் இறங்குவார்; வேறு திசையில் போகச் சொன்னால் போவார். ராஜீவ் காந்தி இப்போதும் ஒரு 'கண்ட்ரோல் டவர்' சொல்படிதான் கேட்கிறாரா என்று தெரியவில்லை.!

('சண்டே' பேட்டியில் ஷரத்பவார் கூறியது.) —அனிதா ராமச்சந்திரன்

எல்லாத் தொகைகளையும் எங்க கம்பெனி பேங்கல போட்டிருக்கோம். டூகேன் டேக் திஸ் அட் எனி டைம்! உங்க துக்கம் ஓரளவு ஆறியப்புறம் நீங்க வேலைல சேரலாம். நாங்க வரட்டுமா மிஸஸ் ராம்."

உள்ளே வந்த குருக்கள், மகளை நெருங்கினார்.

"வாம்மா, போலாம்! இனிமே இங்கே உனக்கென்ன வேலை? நம்மவீட்டுக்குப் போயிடலாம்."

"எதுப்பா நம்பவீடு?"

"என்னம்மா சொல்றே? புத்தி கலங்கிப் போச்சா உனக்கு?"

"தெளிவாத்தாம்பா இருக்கேன். வயசான எங்கப்பாவுக்கு யாருப்பா இனிமே ஆதரவு? பிள்ளையை இழந்து நொடிச்சுப் போயிருக்கிற அம்மாவுக்கு எது மருந்து?

"மாலாவோட கல்யாணத்தை யாருப்பா செஞ்சு வைப்பா?"

"தங்கம்....?"

"உங்களையும் இந்த உலகத்தையும் பொறுத்த வரைக்கும் அவர் போயிருக்கலாம். ஆனா என்னைப் பொறுத்த வரைக்கும் அவர் இன்னமும் இருக்கார். அவரோட கடமை முடியலை. அதோட ரெண்டாவது பக்கம் இனிமே நாந்தாப்பா."

பாவம் செய்த ஆத்மாக்கள்... மூன்றும் அங்கே துடியாய்த் துடிக்க, அவன் படத்துக்கு முன்னால் போய் அமைதியாக நின்றாள் தங்கம்.

"அவாளை ஆதரிக்கிறது உன்னோட கடமை."

கடமை ஆரம்பமாகி விட்டது.



# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

நான்கு ஆண்டுகளில் 'சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்' தங்கள் முதலீடு இரட்டிப்பாகிறது ரு. 5000/ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு ஒரு அழகிய 'வெள்ளி குத்து விளக்கு' அன்பளிப்பாக வழங்கப்படும்



# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் பி. லிட்.

எமது புதிய குருப்புகள்

| மாதங்கள் | அங்கத்தினர்கள் | சந்தா தொகை | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 100 | 2,000 |

ஏல முறை: காப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.
'காப்புத் தொகை' ஏலத்தன்றே திருப்பித்தரப்படும்.
முதலீடு செய்ய, சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க:

நிர்வாக அலுவலகம்: 39, நடேச ஐயர் தெரு, 2வது மாடி
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன்: 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன்: 366971
தஞ்சாவூர் : எண்: 2 & 3, முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர். போன்: 1626
திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 483
பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை. போன்: 453

**C.A. BALOO** Managing Director

**ஜெயசக்தி — நம்பிக்கைக்கு பெயர் பெற்றது**

CHARI



சூர: என்ன, நீர் நிலைகளா? ஏன் உங்கள் நாட்டில் நீர் நிலைகள் இல்லையா?

வலங்: என் சிலேடையைப் பொறுத்தருள வேண்டும். எம் நாட்டில் நீர் நிலையாக இருப்பதில்லை. ஆவியாக மாறிவிடுகிறது.

சூர: விந்தை! விந்தை! மாதம் மும்மாரி உங்கள் நாட்டில் பொழிவதில்லையா?

வலங்: மாறி மாறி ஊர்வலங்கள் தான் வருகின்றனவே ஒழிய, மாரி வருவதில்லை, மன்னர் பிரானே!

# மச்சதேவி

ஜே.எஸ்.ராகவன்

## காட்சி 1

*[சூரட்டூர் சிற்றரசர் சூரகேசி லேசான உறக்கத்துடன் கொலு வீற்றிருக்கிறார். கொழுத்த எருமைக்கடாவின் தாழ்ந்து, வளைந்த கொம்புகளைப் போன்ற மீசையுடன் சேனாதிபதி மாரப்ப பூபதி இரண்டு ஆட்களைப் பிடித்து வருகிறார்.]*

மாரப்ப பூபதி: வணங்குகிறேன், மன்னவா!

சூரகேசி: (கோபத்துடன்): மாரப்ப பூபதி! வணங்கினால் போதும். 'வணங்குகிறேன்' என்று சுய நேர்முக வர்ணனை வேண்டாம். எமக்குக் கண்கள் உள்ளன.... ஹும்... யார் இவர்கள்?

மாரப்ப பூபதி: ஒற்றர்கள், அரசே!

சூர: ஒரே மாதிரி இருக்கிறார்களே? இவர்கள்..

மாரப்ப: இரட்டையர்கள் அரசே!

சூர (சினந்து): மாரப்ப பூபதி! குழப்புகிறீர்களே. இவர்கள் ஒற்றர்களா? இரட்டையர்களா?

மாரப்ப: மன்னிக்க வேண்டும் மன்னவா! இவ்விரட்டையரும் ஒற்றர்கள். அதாவது இவ்விரு ஒற்றர்களும் இரட்டையர்கள். அதோ, அவர் வலங்கிள்ளி, இவர், இடங்கிள்ளி!

சூர: ம்... வல, இடங் கிள்ளிகளே, ஊடுருவிகளே, ஒற்றர் குல இரட்டையர்களே, இரட்டையர் குல ஒற்றர்களே! எம் நாட்டில் எதை வேவு பார்க்க வந்தீர்கள்?

வலங்கிள்ளி: வேந்தே! தங்கள் நாட்டின் நீர் நிலைகளைப் பற்றி உளவறிய வலங்கிள்ளியாகிய நான் வலப்புறமாகவும்...

இடங்கிள்ளி: ....இடங்கிள்ளியாகிய நான் இடப்புறமாகவும்...

வலங்: ...போய்க் கொண்டு இருந்தோம். பிடிபட்டோம். பிறிதொரு கெட்ட எண்ணம் இல்லை, மன்னா!

இடங்: குளங்கள் நிலங்களாகி விட்டன. குட்டைகள் தரை தட்டிவிட்டன. கால் வாயில் வரும் நீர் கால் வாய்க்குக் கூடப் போதவில்லை.

வலங்: இடிகளைக் கேட்காத கொடிய நாகங்கள் அச்சமின்றி நகரை வலம் வருகின்றன. வள்ளல்களால் போர்த்தி விடப்பட்ட கான மயில்கள், புழுக்கத்தால் போர்வைகளைக் களைந்து விட்டுத் துடிக்கின்றன. வானத்தில் மேகம் இல்லை. கண்ட நீரை உண்ட சிறார்கள் வயிற்றில் தான் 'மப்பு' இருக்கிறது. கொடிய தண்ணீர்ப் பஞ்சம் தலைவிரித்து ஆடுகிறது என்பதைத் தெரிவிக்.... விக்....விக்...விக்

இடங்: மன்னவ! தடங்கலுக்கு வருந்துகிறோம். உடனே பிறந்த எனக்கும் சில கணங்களில் விக்கத் தொடங்கி விடும். தயை கூர்ந்து தண்ணீர் தருவிக்...விக்... விக்....

சூர (கண்கள் பனிக்க): கொடுமை! கொடுமை! யாரங்கே! இவர்களுக்குப் பவழம், வைடூரியம் கோமேதகம், புஷ்பராகம், வைரம் போன்ற உயர்ந்த கற்களால் இழைக்கப்பட்ட தங்கக் குவளைகளில் ஏலம், பன்னீர், வெட்டி வேர் கூட்டிய குளிர்ந்த நீரைப் பருக அளியுங்கள். வல, இடங் கிள்ளிகளே!..... உங்கள் அரசரின் பெயரைச் சொல்லவில்லையே....

வலங்: விக்... விக்...விக்கிரமசிம்மன், விக்... விக்.... விக்கிரம சிம்மன்.... விக் ....விக்.. கிரமசிம்மன்.

சூர (கண்களில் தீப்பொறி பறக்க): என்னது விக்குகிற சிம்மனா... சீச்சீ... விக்ரம சிம்மனா! மாரப்ப பூபதி! தங்கக் குவளைகளைத் தடுத்து நிறுத்துங்கள். தண்ணீர் கொடுக்காதீர்கள். இவர்கள் விக்கட்டும்.

விக்கிரமசிம்மனும் விக்கட்டும்...இவர்கள் நாடே விக்கட்டும்... ஹா ஹா .... ஹா ஹா....

(சிரித்துச் சிரித்துக் 'கிர்' ரென்று சிம்மாசனத்தில் சாய்கிறார்.)

## காட்சி 2

[குரட்டூரின் வெளியிலே உள்ள குளிர்ந்த சுனையில் அந்நாட்டு இளவரசி விலாங்கு மீன் போல் நீந்திக் கொண்டு இருக்க, அருகில் உள்ள மரத்தின் பின்னாலிருந்து ஓர் ஆணின் அகன்ற கண்:-: பார்த்துக் கொண்டிருக்கிறது.]

ஆண்: ஆகா! என்ன காட்சி!... என்ன அழகு! இந்தக் கண் இம்மாதிரி விருந்தை உண்டு எவ்வளவு நாட்களாகி விட்டன!

(குரலைக் கேட்ட அரசிளங்குமரி சட்டென்று சமுத்துவரை நீரில் அமிழ்ந்து கொள்கிறாள்)

அரசி: யார் அது? சீ! வெட்கமாயில்லை? பெண் குளிக்கும் இடத்தில் என்ன வேலை!

ஆண் (வெளியே வந்து): பெண்ணே, மன்னிக்க வேண்டும். என் இரண்டு கண்கள் முன்னே இரண்டு அழகிய காட்சிகள். குளிக்கும் காரிகை, சலசலக்கும் சுனை. குளிக்கும் பெண்ணைப் பார்க்கக் கூடாது என்ற நியதியுடன் ஒரு கண்ணை மூடிக்கொண்டு மற்றொரு கண்ணால் சுனையின் அழகைப் பருகிக்கொண்டிருக்கிறேன்.

அரசி (கோபத்துடன்): என்ன பிதற்றல். நீராடும்நங்கையை ஒற்றைக்கண்ணால் ஆந்தையைப் போல் பார்த்துக் கொண்டு இருந்துவிட்டு, சுனையை ரசித்தேன் என்று பசப்புகிறீர்களே!

ஆண் (பெருமூச்சு விட்டு): நான் யார் என்பதைச் சொல்லி விடுகிறேன். அப்போது நம்பிவிடுவாய். நான்தான் தகட்டூர் மன்னன் விக்கிரமசிம்மன்.

அரசி (தண்ணீரிலிருந்து ஈர உடையுடன் எழுந்து வந்து): மன்னிக்கவும், மன்னவா தாங்கள் யாரென்று தெரியாமல்...ஆமாம் உங்கள் ஊரில் கொடிய தண்ணீர்ப் பஞ்சமாமே...

விக்: ஆம் பெண்ணே. நீ யார்?

அரசி (நாணி): நான்தான் இந்நாட்டு இளவரசி மச்சதேவி.

விக் (குறும்புடன்): மச்சதேவி! உன்னை இந்த ஈர நிலையில் எந்நாட்டிலுள்ள ஒரு வயதான புலவர் பார்த்தால் ஒரு மணங்குஎடை பனை ஓலைச் சுவடிகளில் உன்னுடைய கொண்டையிலும், இடையிலும் ஒட்டிய ஈர ஆடைகளைப் பற்றியும், அவைகள் மறைக்க முயன்று கொண்டிருக்கும் மச்சங்களைப் பற்றியும் வர்ணித்துத் தள்ளி விடுவார்.



அரசி: மன்னவரே! என் சார்பில் என் தந்தையை நீங்கள் மன்னித்தருள வேண்டும்.

விக்: ஹும். உங்கள் நாட்டில் சுனைகளிலும் ஏரிகளிலும் நீர் உள்ளனவே தவிர, மனித இதயங்களில் ஈரப் பசை கூட இல்லையே. தாகத்தால் தவித்த என் நாட்டு ஒற்றர்களின் வாயில் துணியை அடைத்து நீர்ப் பரப்பில் தலை கீழாகத் தொங்க விட்டார்களாமே....

அரசி (பெருமூச்சு விட்டு): என் தந்தையின் கோபத்திற்குக் காரணம் உண்டு. அதைத் தெரிவிக்கவும், உங்கள் பராக்கிரமத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட நான் உங்கள் மேல் கொண்ட... மேல்கொண்ட... காதலைப்



வக்கீல்: உமது நிலையத்தில் திருடிய நபரைக் கோர்ட்டுக்கு விளக்க முடியுமா?

வானிலை அதிகாரி: கறுப்பாக இருந்த அந்த வாலிபனின் மீசை முளைத்தும் முளைக்காமலும், தாடி ஆங்காங்கேயும், தலைமுடி பரவலாகவும் காணப்பட்டது. —ப. பழனி

பற்றியும் தெரிவிக்க நற் சமயம் நோக்கியிருந்தேன். இதோ கிட்டி விட்டது.

(காதருகில் ஈர உதடுகளால் கிசு கிசுக்கிறாள்.)

விக்: மச்ச தேவி! உன்னிடம் ஒன்று கேட்பேன், தருவாயா?

அரசி (உஷ்ணப் பெருமூச்சுடன்): சொல்லுங்கள், மன்னவா!

விக்: நான்...நான்... உதடுகளால் பருக அனுமதி வேண்டும்.

அரசி (கொவ்வை இதழ்கள் துடிக்க): மன்னா! மன்னா!

விக் (அவசரமாக): ஐயோ! மச்ச தேவி! என்னைத் தவறாகப் புரிந்து கொண்டாயே. இந்தக் கனி நீரைப் பருகத்தான் அனுமதி கேட்டேன்.

(கோபத்தால் முகம் சிவந்தாலும், அரசனின் குறும்பு முகம் பார்த்துக் கலகலவென்று சிரிக்கிறாள்.)

## காட்சி 3

[குரட்டூரிலிருந்து நூற்றியொரு தேர்கள் புழுதி பறக்கத் தகட்டூரை நோக்கி விரைகின்றன. அலங்கரிக்கப்பட்ட முதல் தேரில் விக்கிரம சிம்மனும், மச்ச தேவியும் அமர்ந்து இருக்கிறார்கள்.]

விக்கிரம: மச்ச தேவி! உன்னைத் தேனே, பாகே, பலாச் சுளையே என்று கொஞ்சுவதை விட குளிர்ந்த நீரே என்று கொஞ்சினால் அது என்னுடைய ஆழ்ந்த அன்பை வெளிக் காட்டுவதாக இருக்கும்.

மச்ச: ஸ்வாமி! எல்லாம் மங்களமாக முடிந்தது. தகட்டூர் மக்களின் தாகத்தைத் தீர்க்க இதோ பின்னால் நூறு தேர்களில் நீர் வருகிறது.

விக்கிர: இத்தேர்களை நான் வாங்க மறுத்ததால்தானே உன் தந்தையார் என் மீது கோபம் அடைந்தார்.

மச்ச: ஆம் நாதா! அண்டை நாடுகளுடன் போர் மூளா ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள உங்களுக்கு எங்கள் நாட்டுத் தேர்களால் பயனில்லை என்று வாங்க மறுத்தீர்கள். எங்கள் நாட்டுத் தேர்த் தொழில் நலிந்து விடக் கூடாதே என்று என் தந்தையார் தேர்களை விற்கக் கடும் முயற்சி செய்தார். நீங்களோ இசையவில்லை.

விக்கி.: கடைசியில் இசைந்தேனே!

மச்ச (கோணல் பார்வையுடன்): இசைய வைத்தேன். தேர்களை வாங்கினால், தேர்களில் பெரிய பாத்திரங்களில் நீரை இனாமாக எத்தனை முறை வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம் என்று நீர்ப் பஞ்சம் உடைய தகட்டூருக்கும், எரிபொருள் தட்டுப்பாடுடைய பகட்டூருக்கு விறகுக் கட்டைகள் இனாமாக எடுத்துச் செல்லலாம் என்றும் என் தந்தையை அறிவிக்கச் செய்ததே நான்தானே.

விக்கிர: மச்சதேவி, உனக்கு வணிக நுணுக்கங்களும் தெரியுமா?

மச்ச: என் தந்தையை விடவா?

விக்கிர: எப்படி?

மச்ச: தேர்களை வாங்கிய தகட்டூர் மன்னருக்கு என்னையும், பகட்டூர் மன்னருக்கு என் தங்கை கச்ச தேவியையும் அளித்த என் தந்தையன்றோ திறமைசாலி!

விக்கிர: தேரை விட, நீரை விட, இலவச இணைப்பாக வந்த காரிகையைப் பார்த்துத் தானே தேரை வாங்க இசைந்தேன்.

மச்ச (சிரித்து): இன்னும் சில நூற்றாண்டுகளில் 'வாளி இனாம்' என்று கூவிப் பொருட்களை விற்றாலும் விற்பார்கள்.

விக்கிர: வாளி இனாமா? யாருக்குத் தேவை? வாளிப்பான மங்கை இனாம் என்றால் நான் வாங்கத் தயார்.

(மச்ச தேவியின் கன்னத்தை அரசர் கிள்ள, குதிரை விஷமமாகக் கனைக்கிறது.)

# ஜப்பானிய மல்யுத்தத்துக்கு

விலைவாசியே, தயவு செய்து இறங்கிடுன்னு கெஞ்சி...




1

...கையெடுத்துக் கும்பிட்டுக் கேட்டாக் கூட...




2

...இந்திரா காங்கிரஸின் பொருளாதாரக் கொள்கைகள் தான் காரணம்னு பழி சுமத்தறே...



5

...உன்னை விட்டேனு பார்!...



6

# இந்தியாவில் ஒரு சவால்!

... இருங்க மாட்டேங்கறே...




... ஜனதா ஆட்சியிலே மரியாதையா நிலைச்சு நிக்கலியா, இருங்கலியான்னு திருப்பிக் கேட்கறே...




...பாய்ஞ்சு, கட்டிப்பிடிச்சு ஒரே அமுக்கா அமுக்கிப்பிடறேன்...



...ஐயய்யோ நழுவி இன்னும் மேலே மேலே போயிருச்சே...



# ஒரு சங்கமத்தைத் தேடி

வாஸந்தி

## 23

''பொய்!''

ஆக்ரோஷமாகக் குரலும் வார்த்தையும் வெளிப்பட்டன.

நாபியிலிருந்து ஒரு துக்கம் பகபகவென்று எழும்பித் தொண்டையை அடைத்தது.

''இத்தனை நாள் என்னை நீ ஏமாத்தினது போதும் தாரா. இனிமே எனக்குத் தாங்காது. சொல்லு. உன் குழந்தைக்கு அந்த நிறமும் செம்பட்டை. மயிரும் ப்ரௌன் கண்ணும் எங்கே இருந்து வந்தது?''

அவள் பதிலே பேசாமல், அவனுக்கு இருக்கும் ஆத்திரத்தில் குழந்தையை என்ன செய்து விடுவானோ என்று பயந்தவள் போல் அதை அணைத்து அதன் சிரத்தில் தன் அதரங்களைப் பதித்து நின்றாள்.

''மை காட்! என்னாலே நம்ப முடியல்லே'' என்றான் நடுங்கும் குரலில், ''எல்லாரையும் வேஷதாரிகன்னு சொல்லி நீ எத்தனை பெரிய வேஷம் போட்டிருக்கே!''

அவனுடைய தலை இன்னும் கீழே குனிந்தது. அவனுடைய மௌனம் அவனது கோபத்தையும் சுயபச்சாதாபத்தையும் கிளப்பிற்று. அவன் அவளருகில் வந்து ஆவேசத்துடன் அவளது தோளைப் பற்றி உலுக்கினான்.

''ஏன்? ஏன் இப்படிப் பண்ணே? எனக்கு இப்படிப் பண்ண உனக்கு எப்படி மனசு வந்தது? என்னைத் துரத்தி அடிச்சுக் கல்யாணம் எதுக்குப் பண்ணிண்டே? எனக்குப் பின்னாலே ஏதோ ஹேலோ இருக்கும்பியே, அதிலே ஒளிக்கலாம்னு?''

அவனுடைய குரலையும் ஆவேசத்தையும் பார்த்துக் குழந்தை பெரிதாக அழ ஆரம்பித்தது.

அவள் அதைச் சமாதானப் படுத்திக் கொண்டே மெல்லிய குரலில் சொன்னாள்.

''உன்னை நிதானப்படுத்திக்கோ கார்த்திக். இந்த நிலையிலே நான் எது சொன்னாலும் உன்னாலே கிரகிச்சுக்க முடியாது.''

கொஞ்சம் கூடப் பதற்றமில்லாத, பயமில்லாத அவளது நிதானம் அவனுக்கு அதிர்ச்சியைத் தந்தது.

''எத்தனை திமிர் இருந்தா இத்தனை நிதானமாப் பேசுவே! அதோட என் குழந்தைன்னு சொல்லுவே!''

குழந்தையின் அழுகை சற்று ஓயட்டும் என்று காத்திருந்தவள் போல் ஓய்ந்ததும்



வேலைக்காரப் பெண்ணைக் கூப்பிட்டு அதை வெளியில் அழைத்துப் போகச் சொல்லிவிட்டு கார்த்திக் எதிரில் வந்து அமர்ந்து கொண்டாள்.

அவள் பேச ஆரம்பித்தபோது சற்று முன் இருந்த நிதானம் இல்லை. குரலும் முகமும் உணர்ச்சி வசப்பட்டிருந்தன.

''கார்த்திக், நான் உன்னை ஏமாத்தல்லே. எந்த நிலைமையிலேயும் உன்னை ஏமாத்த நினைக்க மாட்டேன். கொஞ்சம் பதற்றப் படாமக் கேளு. இந்தக் குழந்தை பிறக்கறதுக்கு நீயும் நானும்தான் காரணம். அதனாலே அவன் நம்ம குழந்தை.''

அவனுக்கு மிதமிஞ்சிய கோபம் வந்தது.

''ஐ நோ ஐ ஆம் நாட் ரெஸ்பான்ஸிபில்! எழுத்து வாசனை இல்லாத மன்னிகூடப் பனிச்சின்னு சொல்லிட்டா! திரும்பத் திரும்ப நீ சாதிக்கிறதினாலே உலகத்தை ஏமாத்த முடியாது.''

அவள் அவனைத் தீர்க்கமாகப் பார்த்தாள். அவள் பேச்சு தெளிவாகத் தடுமாற்றமில்லாமல் வந்தது.

''பொய்யை நிஜம்னு சொல்லி நான் சாதிக்கல்லே. இயரிட்டிகலா நீதான் இந்தக் குழந்தை பிறக்கக் காரணம். முன்னே ஒரு நாளைக்கு என்னைக் கட்டாயப்படுத்தி லோபோ வீட்டுப் பார்ட்டிக்கு அனுப்பிச்சியே ஞாபகமிருக்கா?''

அவன் அதிர்ந்து போய் அவளைப் பார்த்தான். மறுபடி கோபம் குபீரென்று கிளம்பிற்று.

''நான் கட்டாயப்படுத்தினா நீ இப்படிப் பழி வாங்கணுமா?''

அவள் அடிபட்டுப் போனவள் போல் அவனைப் பார்த்த பார்வையில் கண்ணீர் பளபளத்தது.

''இத்தனை நாளா என்னோட பழகியிருக்கே! என்னை இன்னும் நீ புரிஞ்சுக்கல்லே! உன் மேலே எனக்குப் பிரியம் இல்லேன்னுதான் அந்த மாதிரி எண்ணம் தோணும். அந்த அளவுக்குப் பக்குவமில்லாத சுய கௌரவம் இல்லாத மனுஷி இல்லே நான்னு நீ புரிஞ்சுக்கணும்!''

''எனக்கு எந்த விதமான லெக்சரும் வேண்டாம். விஷயத்தைச் சொல்லு.''

மனசில் இத்தனை நாளும் சுமந்து வந்த பாரத்தை இறக்குபவள் போல் அவள் தலையைக் குனிந்தபடி சொன்னாள்.

''அன்னிக்கு லோபோ அழைச்சபோது எனக்குப் போகவே இஷ்டம் இல்லேன்னு உனக்குத் தெரியும். உன்னுடைய பாஸ் அழைச்சபோதெல்லாம் நான் வரமாட்டேன்னு சொன்னால் உனக்கு அது வருத்தமளிக்கலாம்னு எனக்குத் தோணித்து. அதைத் தவிர அது வழக்கமான பார்ட்டி இல்லேன்னு சொன்னாய். ட்ரிங்க்கும் அர்த்தமில்லாத பேச்சும் இருக்காது. சாஸ்திரீய சங்கீதம் கேட்கலாம் என்கிற சமாதானத்திலே ஒப்புத்துண்டேன். லோபோ சாமர்த்தியமா உனக்கு வெளி வேலை கொடுத்தது ரொம்ப யதார்த்தமான விஷயம் போல நினைச்சோம்.''

அவள் உணர்ச்சிகளின் விளிம்பில் நின்றாள். மார்பு வேகமாக அடித்துக் கொண்டது.

''அங்கே வந்திருந்த சின்னக் கும்பல் சங்கீதத்தை ரசிக்க வந்த கும்பல் இல்லேன்னு சங்கீதம் முடியறதுக்குள்ளேயே எனக்குச் சந்தேகம் வந்தது. கச்சேரி முடிஞ்ச கையோட சங்கீத வித்வான் புறப்பட்டுப் போனார். நான் பண்ணின தப்பு அப்பவே பிடிவாதமாக் கிளம்பாதது தான். அஞ்சு நிமிசத்திலே காரிலே கொண்டு விடறேன்னு சொன்ன லோபோவை ஏதோ ஒரு அசட்டுத் தனத்திலே நம்பினேன். அங்கே ஊது பத்தியோ என்னவோ புகைஞ்சுண்டிருந்ததிலே எனக்கு ரொம்பத் தலைவலி. 'ஆஸ்ப்பிரின் இருக்குமா'ன்னு கேட்டேன். லோபோ பக்கத்திலே இருந்தவனைப் பார்த்து 'அவனுக்கு மாத்திரை கொடு'ன்னார். அவன் ஆஸ்பிரின் மாதிரி ஏதோ ஒரு மாத்திரை கொடுத்தான்....''

தாரா சற்று நிறுத்தி விட்டத்தை ஒரு வெற்றுப் பார்வை பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மார்பு லபோ லபோ என்று அகரத்தனத்தோடு அடித்துக் கொண்டது அவனுக்குத் துல்லியமாகக் கேட்டது.

''கார்த்திக், உனக்கு லோபோவை ஒரு ஆஃபீஸராகத்தான் பழக்கம். அவருடைய அந்தரங்க வாழ்க்கையைப்பற்றித் தெரியாது. அவர் கோவாவைச் சேர்ந்தவர். பிரும்மச்சாரி. அன்னிக்கு அங்க வந்தவா எல்லாரும் ட்ரக்ஸ் சாப்பிடறவா. இவர் ட்ரக் ட்ராஃபிக் ஏதோ செய்யறார்னு தோணறது. மாசத்துக்கு ஒரு தடவை இந்த மாதிரி ஒரு கூட்டம் போடறா... யாருக்கும் சந்தேகம் வர முடியாம. அந்த மாத்திரையை நான் சாப்பிட்டது ஒரு விபத்தா லோபோ வேணும்னே செய்தகாரியமான்னு எனக்கு நிச்சயமாத் தெரியல்லே. கொஞ்ச நேரத்துல என்ன நடக்கிறதுன்னே எனக்குப் புரியல்லே. சிரிக்



கிறேன், அழறேன், குதிக்கிறேன். கார்த்திக் நீ நம்ப மாட்டே. இட் வாஸ் மாடன்னிங்! எல்லாரும் சிரிக்கறா, டான்ஸ் ஆடறா, பாட்டு பலமா ஒலிக்கிறது! எனக்கு எதுவுமே நினைவில்லே. ஆகாசத்திலே மிதக்கிற மாதிரி இருக்கு. எல்லாரும் போதையிலே இருக்கிறதுஎனக்குப் புரியறது. எத்தனை பைத்தியங்கள்னு உள்ளுணர்வு அருவெறுக்கிறது. இருந்தும் என்னாலே ஒண்ணும் செய்ய முடியல்லே. எல்லாரும் எல்லாரையும்அணைச்சுக்கறா,முத்தமிடறா. விவஸ்தையே இல்லாம. என்ன நடந்தது அன்னிக்குன்னு நீ கேட்டியானா எனக்கு ஒண்ணும் தெளிவாச் சொல்லத் தெரியாது. மெல்ல மெல்ல என் மூளை தெளிவடைஞ்சது. கார்ப்பெட்லே நான் படுத்திண்டிருக்கேன். பக்கத்திலே லோபோ! நான் விருக்குன்னு எழுந்திண்டேன். அங்கே வேற யாரும் இல்லே. எங்கே போனான்னு தெரியல்லே. எனக்குள்ளே ஏற்பட்டுப் போன அவமானம் சுரீர்னு புரிஞ்சு போச்சு. மகாக் கோபம் வந்தது. படுத்திண்டிருந்த லோபோவை உலுக்கி எழுப்பினேன். அவனுடைய கன்னத்திலே பளார் பளார்ன்னு அறைஞ்சேன். 'என்னை என்ன பண்ணினேன்'னு கத்தினேன். 'போலீஸ்லே கம்ப்ளெயிண்ட் கொடுப்பேன்'னு சொன்னேன்.

''அவன் கொஞ்சநேரம் ஒண்ணும்பேசல்லே. அப்புறம் நிதானமாச் சொன்னான்:

''நான் என்ன பண்ணினேன்? நீயான்னா வந்தே'ங்கறான்!

''நான்அதிர்ச்சியடைஞ்சுபோனேன்.'எனக்கு சுய நினைவு இல்லாம ட்ரக் பண்ணி ரேப் பண்ணினேன்னு போலீஸ்லே சொல்லுவேன்'ன்னேன்.

''அவன் சிரிச்சான்.

''உன்னைப் பலாத்காரம் பண்ணினேங்கறதுக்கு அடையாளம், சுக வேணும். உன் உடம்பிலே ஒண்ணும் இருக்காதுன்னான். என் வீட்டைப் பூரா ட்ரக்ஸுக்காகச் சோதனை போடச் சொல்லு போலீஸைன்னான். 'இத்தனைசின்ன விஷயத்துக்கு இத்தனை ஆத்திரப் படறியே, வா, வீட்டுக்குக் கொண்டு விடறேன்'னான். எனக்கு மகா ஆத்திரம் வந்தது. 'எனக்குப் போகத் தெரியும்'னு திரும்பிப் பார்க்காம கிளம்பினேன்.

''கார்த்திக், என் கெட்டிக்காரத்தனத்தை வச்சு யாரை வேணா ஜெயிக்கலாம்னு நான் அதுநாள் வரை தைரியமா இருந்தேன். அவன் என் மூளையை மழுங்க அடிச்சு அவமானப்படுத்திட்டான். நான் நினைச்சதை விட அவன் பயங்கர க்ரூக்னு புரிஞ்சுண்டேன். அவன் சொன்னமாதிரி நான் போலீஸுக்குப் போனாலும் கேஸை ஜோடிக்கச் சரியான ஆதாரங்கள் இல்லே...''

அவன் தாங்க முடியாத அதிர்ச்சியுடன், நம்ப முடியாத திகைப்புடன் உட்கார்ந்திருந்தான்.

மை காட்! இவ்வளவு நடந்தும் நம்மிடம் இவள் ஒரு வார்த்தை சொல்லவில்லே!

''இதையெல்லாம் ஏன் அன்னிக்கே என்கிட்டச்சொல்லல்லே?'' என்றான் இன்னும் தணியாத ஆத்திரத்துடன்,



## முடி வெட்டுதலில் நூதன முறை

அமெரிக்காவில் முடி வெட்டுதலில் ஒரு நூதன முறை பரவி வருகிறது. இந்த முறையின்படி வாடிக்கையாளரை ஸ்டிரெச்சரில் படுக்க வைத்து இறுக்கிக் கட்டி விடுகின்றனர். பிறகு இரு கண்களையும் கட்டி, ஸ்டிரெச்சரைத் தலை கீழாகத் திருப்பி ஒரு பிடிப்பில் தொங்க விடுகிறார்கள். அதன் பிறகு முடி வெட்டப்படுகிறது. இம்முறையால்புவி ஈர்ப்பு விசை காரணமாகத் தலை முடியைச் சீராகவும் எளிதாகவும் வெட்ட முடிகிறது என்கிறார் சலூன்காரர்!

ஆதாரம்: டைம்ஸ் ஆப் இந்தியா

''பட்டாணி''

★★★★★★★★★★★★★★★★★★

''உனக்கு இதைச் சொல்லலாமா வேண்டாமான்னுநான் ரொம்பநேரம்யோசிச்சேன். சொல்றதிலே பிரயோஜனமோ லாபமோ இருக்காது. நீ ரொம்பக் கலங்கிப் போயிடுவேன்னு தோணித்து. அப்புறம், எனக்கு இன்னொரு பயமும் இருந்தது.''

அவள் சற்று நிறுத்தினாள். பிறகு வார்த்தைகளைத் தேடிக் கோக்கிறாற்போல் சிரமத்துடன் சொன்னாள்:

''என்னைப் பொறுத்தவரை இது எனக்குத் தெரியாமல் நேர்ந்த விபத்து. பலவீனமான நிலையிலே என் பெண்மை அவமானப்படுத்தப்பட்டது என்கிற கோபத்தைத் தவிர எனக்கு எந்த விதமான மனக் கூச்சமும் இல்லே. என்னுடைய பவித்திரம் குறைஞ்சு போச்சுன்னோ, என் கற்புக்குப் பங்கம் வந்துடுத்துன்னோ நான் நினைக்கல்லே. ஆனா இதே மாதிரி கோணத்திலே நீ பார்ப்பியோன்னு சந்தேகமா இருந்தது. நீ வளர்ந்த முறை வேற. நீ நிலைமையைப் புரிஞ்சுக்கல்லேன்னா உனக்கு ஏற்படக் கூடிய பாதிப்பு உன்னை ரொம்பக் கஷ்டப்படுத்தும். உன்னை அப்படிக் கஷ்டப்படுத்த நான் விரும்பல்லே! ஐ லவ் யூ டூ மச் டு டு தட் கார்த்திக்!''

அவன் திடீரென்று வெறி பிடித்தவன் போல் சிரித்தான்.

''நாடகங்கள்ளே டிராமாட்டிக் ஐரனின்னு வரும். அது மாதிரி பாத்தியா, நீ என்கிட்

டேந்து மறைச்சே. அது இப்பப் பிரத்யட்சமா கண்ணெதிரே நிக்கிறது! சாதாரணமா இல்லே! என் பெயரைச் சுமந்துண்டு நிக்கறது. உனக்கு என் மேலே பிரியமோ நம்பிக்கையோ இருந்திருந்தா எங்கிட்ட சொல்லாம மறைச்சிருக்க மாட்டே!''

தாரா சில விநாடிகள் பேசாமல் இருந்தாள். பிறகு மெல்லிய குரலில் சொன்னாள்.

''எனக்கு நீ தேவை. அனாவசியமா எந்த ரிஸ்க்கையும் எடுக்கநான் தயாராயிருக்கல்லே. கார்த்திக், நீ என்னைப் புரிஞ்சுக்கணும். எனக்குக் குழப்பமா இருந்தது. தவிர இது ஒரு விபத்து என்ற எண்ணம்தான் இருந்தது எனக்கு. இதை உங்கிட்டச் சொன்னா ஆபத்தா முடியலாம்னு தோணித்து. உன்னை இழக்க எனக்கு விருப்பமில்லே கார்த்திக்!''

''நீ என்னை இழக்கிறதாவது? ஐ ஹேவ் லாஸ்ட் யூ! ஐ ஹேவ் லாஸ்ட் மை சைல்ட்!''

அவள் அதிர்ந்து போய் அவனைப் பார்த்தாள்.

''கார்த்திக், தயவுசெய்து இப்படிப் பேசாதே. குழந்தையை நீ நிராகரிக்க முடியாது. அது ஒரு குத்தமும் செய்யல்லே!''

அவன் தனது தலையை இரு கைகளாலும் அழுந்தப் பிடித்துக் கொண்டான். மிக மோசமாக யாரோ தன்னை ஏமாற்றிவிட்டாற் போல் துக்கம் குமுறிக் கொண்டு வந்தது.

''நீ சொல்ற மாதிரி இது ஒரு டிராமாட்டிக் ஐரனிதான் கார்த்திக்! ஒரே ஒரு சேர்க்கையிலே அவனுடைய வித்து என்னுள்ளே உருவமாப் போனது ஐரனிதான்!''

ஒரே ஒரு சேர்க்கைதானா? இவள் நிஜத்தைச் சொல்கிறாளா? யாரை நம்பலாம், யாரை நம்பக் கூடாது? அவனுக்கு மிகப் பெரிதாகக் கத்த வேண்டும் போலிருந்தது.

''ஃப்ராட்ஸ்! ஸ்கௌண்ட்ரல்ஸ்! சீட்ஸ்!''

அவர்: நேற்று உங்க ஆபீஸின் முன் எல்லோரும் போராட்டம் நடத்தினீங்களே எதுக்காக?

இவர்: ஆபீஸில் தூங்கி எழுந்தவுடன் எல்லோருக்கும் காப்பி வழங்க வேண்டும் என்பதற்குத்தான்.

—கரந்தை து. சுவாமிநாதன்



திடீரென்று வயதாகி விட்டது போல் அவன் சலிப்புடன் மௌனமாக எழுந்தான். விருவிருவென்று நடந்தான்.

பஸ் நிலையத்துக்குச் சென்று பஸ்ஸில் ஏறிய பிரக்ஞையே இல்லாமல் உத்தர சுவாமி மலை ஸ்டாப்பில் இறங்கினான்.

அந்தக் குன்றையும், 'ஜிக்ஜாக்' படிகளையும், மேலே இருக்கும் கோவிலையும் பார்க்கப் பார்க்க ஆத்திரமும் துக்கமும் பீறிட்டன.

'ஏன், ஏன்' என்ற கேள்வி நெஞ்சைப் பிசைந்தது. 'நான் என்ன தவறு செய்தேன்?' என்ற சுய பச்சாதாபம் அவனின் ஒவ்வொரு அணுவையும் ஆட்கொண்டது. நவ நாகரிக வாழ்வு எத்தனை பேர் வாழவில்லை? எவ்வளவு பேர் பார்ட்டிகளுக்குப் போகவில்லை? எல்லாருக்குமா இந்த விபத்து ஏற்படுகிறது? விபத்துத்தானா அது?

தன் எண்ண ஓட்டத்தைக் கண்டு அவன் அதிர்ந்தான். ஓ காட், நான் இயல்பாக மறுபடி இயங்க முடியுமா?

ஒரு அந்நியனின் பிம்பம் என் பெயரைச் சொல்லிக் கொண்டு என் கூரையின் கீழ் வளர்ந்து வருவதை நான் சாதாரண விஷயமாக நினைக்க முடியுமா?

எத்தனை பெரிய கேலிக்கூத்து இது! இதே குழந்தை தாராவின் முக ஜாடையோடு மட்டும் பிறந்திருந்தால் யாருக்கு என்ன சந்தேகம் வந்திருக்கப் போகிறது? தாராவுக்கும் லோபோவுக்கும் இடையே ஒரு ரகசியம் தெளிவில்லாத நினைவில் புதைந்து போயிருக்கும்.

லோபோ!

எத்தனை மோசமாக ஏமாற்றி விட்டான்! எத்தனை சாமர்த்தியமாக — விரல் நீட்டிக் குற்றம் சாட்ட முடியாதபடி — நீட்டினால் நீட்டியவன் கண்ணைக் குத்துகிற மாதிரி!

படியேறத் துவங்கும்போது திடீரென்று தாராவின் பாட்டி சொன்னது நினைவுக்கு வந்தது.

''சுப்புஸ்வாமி, நீங்க ஸ்வாமி மலையிலேந்து டில்லிக்கு வந்ததும், உம்ம பிள்ளை இன்ஜினியரிங் படித்ததும், என் பேத்தியைச் சந்திக்க இரண்டு பேரும் பிரியப்பட்டதும் யாரோ பிளான் பண்ணினது மாதிரி இல்லே?''

இந்த மலையின் மேல் இருப்பவன்தான் இந்தப் பைத்தியக்கார நாடகத்தின் ஆசிரியன் என்றால் மிகக் குரூரமான கற்பனையுடையவனாக இருக்க வேண்டும் அவன்....

சட்டென்று அவன் படியிலிருந்து இறங்கிக் குறுக்கு வழியாக வீட்டை நோக்கி நடந்தான். ரேழியில் அத்தை ஒரு தமிழ்ப் பத்திரிகையில் ஆழ்ந்திருந்தாள்.

அவனைப் பார்த்ததும் சந்தோஷ வியப்பைக் காண்பித்தாள்.

''தாராவும் குழந்தையும் எங்கே?''

''நான் மாத்திரம்தான் வந்தேன்'' என்றான் அவன். அந்தக் கணம் முடிவெடுத்தவனாய்ச் சொன்னான்:

''நான் உங்க கிராமத்துக்குப்போகப்போகிறேன் அத்தை. அங்கே வீட்டுச் சாவி யார் கிட்டே இருக்கும்?''

(தொடரும்)

எங்களது புதுமையான “முக்கனி” “LOHT” சேமிப்பில் முதலீடு செய்வது என்பது நீங்கள் கணக்கிட்டதை விடவும், கவலையற்ற பாதுகாப் பான ஒய்வு காலத்திற்கு பொறுப்பான முன்யோசனை என்றே பொருள்.

இத் திட்டத்தின் கீழ் 120 மாதங்களுக்கு தொடர் ந்து ரூ. 100/– செலுத்தி வந்தால், அடுத்த 120 மாதங்களுக்கு மாதா மாதம் ரூ. 268.50 (ஒய்வூதியம் போல்) பெறலாம்.




விவரங்களுக்கு :
தமிழகம் முழுவதிலுமுள்ள, மற்றும் திருவனந்தபுரம், ஹைதராபாத் கிளைகளை அணுகுங்கள்.

**பாங்க் ஆப் தமிழ்நாடு லிட்.,**
(ஒரு ஷெட்யூல்ட் பாங்க், ஸ்தாபிதம் 1903)
62, கீழரத வீதி, திருநெல்வேலி டவுன்.

பாரம்பரியம் மிகுந்த அணுகுமுறைகளும்
முகம் சிணுங்காத சேவையும்
அபூர்வமான முறையில் இணைந்தது.

EP-BT-105-82

*உங்களுக்காகவே நாங்கள்*

# விழுப்புரத்தின் வேதனைகள்

ப. காந்தி



✕ செம்மண்ணிப்படாமல் இன்று வரை இருக்கும் வடக்கு வீதியின் தோற்றம்



✕ விழுப்புரத்தில் ஏற்பட்டுள்ள குடிநீர் பற்றாக்குறை போக்க வழி பலர் கை குடிநீர் வழங்குகின்றனர். அவர்களில் இரும்பு வியாபாரி இருவர். அதில் குறைந்தது நாளொன்றுக்கு 400 குடங்கள் தண்ணீர் சப்ளை செய்கிறார்.

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் நடுமையமாக அமைந்துள்ள விழுப்புரம், சாலை வசதியிலும், ரயில் வசதியிலும் பல்வேறு ஊர்களை இணைக்கும் நகராகவும், மாவட்டத்தின் தானிய உற்பத்தியைக் கொள்முதல் செய்வதில் முதலிடம் வகிக்கும் நகராகவும் இருக்கிறது.

இருப்பினும் இந்த நகரின் அடிப்படை வசதிகள் பல இன்னும் கவனிக்கப்படாமலே இருக்கின்றன.

## ரோட் ரோலருக்கு ஆபத்து!

இமய மலை, விந்திய மலை, மேற்குத் தொடர்ச்சி மலைகளை இங்கிருந்து போய் வெளியே எங்கும் காண வேண்டியதில்லை. அவற்றை எங்கள் நகரில் உள்ள சாலைகளிலேயே கண்டு கொள்ளலாம். கோடைக் காலங்களில் சாலைகளின் புழுதி ஆடைகளை அசுத்தமாக்குகின்றது. சமயத்தில் அவர்ஜி ஏற்பட்டு ஒருசிலருக்கு ஜுரம், சளி கூடப் பிடித்து விடுகிறது: கோடை காலத்துக்குப் போட்டியாக மழைக் காலம் தண்ணீரை ஆங்காங்கே தேக்கி வைத்துக் கொண்டு அவ்வப்போது நம்மைக் குளிப்பாட்டிக் கௌரவிக்கின்றது. தற்போதுள்ள புதிய ஆணையரும், தனி அலுவலரும் நகரின் நலனில் அக்கறை கொண்டு சாலை வசதிக்காக முயற்சி எடுக்கும் தறுவாயில் விழுப்புரம் நகராட்சிக்குச் சொந்தமான ரோடு ரோலரைத் திண்டிவனம், விருத்தாசலம், திருக்கோவிலூர் நகராட்சிகளுக்குப் பணி செய்ய அரசு உத்தரவு போட்டு அனுப்பி விட்டது. இக்கட்டுரை எழுதப்படும் தறுவாயில் ரோட் ரோலர் திரும்பி வந்து மகாத்மா காந்தி சாலையில் செப்பனிடும் பணி ஆரம்பமாகியுள்ளது. ஆனால் இது எல்லா வீதிகளையும் செப்பனிட ஆரம்பமா என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம்.



✖ நகரத்தின் கழிவு நீர் சங்கமமாகும் புனித இருக்குளம்

## 15 நிமிஷம் நீர்:

கடந்த இரண்டு ஆண்டுகளாக விழுப் புரத்தில் இருக்கும் குடிதண்ணீர் தட்டுப் பாட்டைப் போன்று வேறு எந்தக் காலத் திலும் இல்லே. புதிதாக வந்திருக்கும் ஆணை யரும் தனி அலுவலரும் விழுப்புரம் குடிநீர் வடிகால் வாரியக் கோட்டப் பொறியாளரும் 55 இடங்களில் ஆழ் குழாய்க் கைப் பம்புகள் அமைக்க உத்தரவு பெற்றனர். ஆனல் போடப்பட்டுள்ளதோ 7தான். மீதியைப் போடப் பைப்புகள் கைவிருப்பு இல்லே. அத ஞல் தாமதமாகிறது என்று அரசு தரப்பில் தருகின்றனர் விளக்கம். விழுப்புரம் நகரைப் பொறுத்தவரை குடிதண்ணீர் திட்டம் 1970ல் 45000 மக்களுக்காக ஆரம்பிக்கப் பட்டது. இன்றுள்ள மக்கட் தொகையோ 80000. இரட்டிப்படைந்துள்ள மக்கள் தொகைக்கு ஏற்பக் குடி தண்ணீர் திட்டம் விஸ்தரிக்கப்படவில்லே. தற்போது குடி தண் ணீர் விடுகின்ற கால அளவோ 15 முதல் 20 நிமிடங்கள். இந்தத் துயரைப் போக்க வேறு தொலே நோக்குத் திட்டங்கள் இல்லேயா? ஏராளமாக இருக்கிறது. பெண்ணேயாற்றில் இருக்கும் மூன்று கிணறு களிலும் போர் பம்பு மூலம் தண்ணீரை வெளியேற்றம் செய்தால் குடிதண்ணீர் பிரச்னே தீரும். இது இல்லே யெனில் வீரா ணம் திட்டத்திற்சென்று திண்டிவனம் வரைதோண்டியுள்ளகால்வாயில்குழாய்களேப் பொருத்தி வீராணம் ஏரியிலிருந்தும் தண் ணீர் பற்றுக்குறை காலத்தில் நெய்வேலியி லிருந்தும் நீரைக் குழாய் மூலம் தருவிக்க லாம். ஆனல் அரசு வீணுகக் கௌரவம் பார்த்துக் கொண்டு காலத்தை வீணடித் துப் பொதுமக்களேயும் கஷ்டத்திற்கு உள் ளாக்கி வருகிறது.



✖ நகரத்தின் மையத்தில் அமைந்து எந்த நேர மும் மூடிக் கிடக்கும் ரயில்வே கேட்.

## கடலூருக்குப் போ!

ஏதேனும் ஒரு விபத்து என்ருல் எல்லாரும் கடலூர் மருத்துவ மனேயை நாட வேண்டி

யுள்ளது. கடந்த காலங்களில் நடந்த விபத்துக்களைக் கவனித்தால் விழுப்புரம், திண்டிவனம், உளுந்தூர்ப்பேட்டை சரகங்களில் உள்ள தேசிய நெடுஞ்சாலையில்தான் விபத்தில் அடிபடும் நபர்கள் அதிகம். ஆனால் அவர்களை இங்குள்ள மருத்துவ மனைகளில் சேர்த்தாலும் அங்கு போதிய சாதனங்களும், வசதிகளும், டாக்டர்களும் இல்லாததால் இவர்கள் கடலூர் அனுப்பப் படுகின்றனர். வெகு தொலைவில் இருக்கும் கடலூருக்கு அனுப்பப்படும்போது அவர்கள் போகும் வழியிலேயோ ஆஸ்பத்திரியில் அனுமதித்த வுடனேயோ இறந்து விடுகின்றனர். இது போல நடந்த கருணங்கள் ஏராளம். எனவே, கடலூர் மருத்துவ மனையைப் போன்று வசதியுள்ள மருத்துவ மனையை விழுப்புரத்தில் கட்டுவதற்கு ஆவன செய்ய வேண்டும்.

## கொசு உற்பத்திக் கூடம்

கொசுக்கள் உற்பத்திக் கூடமாக ஆஞ்சநேயர் குளம் நகரின் மையத்தில் அமைந்துள்ளது. நகரில் உள்ள ஒருசில சாக்கடைகளில் (பாதி வீதிகளில் சாக்கடைகளே இல்லை என்பது குறிப்பிடத் தக்கது) வரும் கழிவுநீர் சங்கமமாகும் புனித கங்கை ஸ்தலமாக ஆஞ்சநேயர் குளம் திகழ்கிறது. இதனால் இந்த நகரமே துர் நாற்றமடித்துக் கொண்டிருக்கிறது. இங்குள்ள கொசுக்கள் ஒவ்வொன்றின் எடையும் கோலி குண்டிற்குச் சமமாக இருக்கும். இவைகள் மாம்பலம், கும்பகோணம், மற்றும் திண்டுக்கல் கொசுக்களை விழுங்கி ஏப்பம் விட்டு விடும். நகரில் இரண்டே இரண்டு இடங்களில் தடுப்பில்லாத வகையில் கழிப்பறைகள். அதுவும் சிறுநீர் கழிப்பதற்கு மாத்திரம்தான். இதனால் மக்கள் எல்லா வீதிகளையும் தங்களால் இயன்ற அளவில் அழகுபடுத்துகின்றனர். இதனால் கொசுக்களின் உற்பத்தி நாளொரு வண்ணமாகப் பன்மடங்கு பெருகுகிறது.

நகராட்சிக்கென்று சொந்தமாக ஆடிட்டோரியம் அல்லது டவுன் ஹால் என்று ஒன்று கூட இல்லை.

பஸ் ஸ்டாண்டை விரிவுபடுத்த வேண்டியுள்ளது. தற்போது இருக்கும் பஸ் நிலையத்தை யொட்டிப் பரந்து கிடக்கும் குட்டையைத் தூர்த்து வசதி செய்தால் மிகப் பெரிய அளவில் பஸ் நிலையம் விரிவடையும். ஆனால் இதற்கு மாறாக அரசு பஸ் ஸ்டாண்டை வேறு இடத்திற்கு மாற்றப் பொதுமக்களின் அபிப்பிராயம் கேட்டதில் பலத்த எதிர்ப்பு இருந்தது.

## நடக்க வேண்டாம்; மிதக்கலாம்!

தென்னார்க்காடு மாவட்டத்திலேயே அதிக வருமானமுள்ள 'ஏ' கிரேடு நகராட்சியுடன் விரிந்து கிடக்கும் இந்நகரில் உள்ளூர் டவுன் பஸ் வசதி இல்லை. எங்கு செல்ல வேண்டுமானாலும் ரிக்ஷாவில்தான் செல்ல வேண்டும். இவர்களின் கொட்டமோ சொல்லி மாளாது.

காய்கறி மார்க்கெட்டில் யாரும் நடக்க வேண்டாம், நின்றிருந்தாலே போதும். பின்னால் வருபவர் நம்மை நெருக்கி ஒரு மூலையில் இருந்து மற்றொரு மூலைக்குக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவார். இந்த லட்சணத்தில் இது ஒரு வழிப் பாதையாம்! இதை விரிவுபடுத்த வேண்டும்.

கீழ்ப்பெரும்பாக்கம் இரயில்வே கேட் சந்திப்பில் மேம்பாலம் அமைக்கவோ அல்லது அண்டர் கிரவுண்ட் அமைக்கவோ எவ்வளவோ முறையீடு செய்தும் இதுவரை எந்தவிதமான முயற்சியும் இல்லை.

ஐந்து மார்க்கங்களில் சந்திக்கும் இந்தச் சந்திப்பில் இருந்து செல்வதற்கு வைகை, தாதர், ஜி. டி. எக்ஸ்பிரஸ், ஜனதா மெயில் ரயில்களைத் தவிர வேறு எந்த ரயிலிலும் இட ஒதுக்கீடு (ரிசர்வேஷன்) வசதி இல்லை. இதற்காக வேண்டிப் பலமுறை விண்ணப்பித்தும் தகுந்த பலன் இல்லை.

எங்கள் மாவட்டத்தில் பல வகையிலும் முன்னேறிவிட்ட நிலையில் இருக்கும் பண்ருட்டி நகராட்சியில் கால் பங்கேனும் விழுப்புரம் நகராட்சி எட்டாதா என்று ஏங்கிக் கொண்டிருக்கும் உள்ளங்களுக்கு என்றுதான் அமைதி கிட்டுமோ?

படங்கள்: சாமி ஸ்டீல்ஸ்



பாட்னா அருகே உள்ள பர்காஜுப் பகுதியில் உள்ள ஆதிவாசிகளிடையே ஒரு வழக்கம். யாராவது ஒருவர் பிறர் மனைவியுடன் தகாத உறவு கொண்டால் அவரைச் சாக்குப் பையில் போட்டுக் கட்டி மலை உச்சியிலிருந்து உருட்டிவிடுகிறார்கள். ஆணுக்கு மட்டுமே இந்தத் தண்டனை. பெண் மன்னிக்கப்படுகிறாள்!

—ஏ. கே. நாசர்

# டெட் கட்டியில் மட்டுமே உள்ளது ஸால்வெண்ட் பவர்

## இது துணிகளுக்கு முற்றிலும் பளிச்சிடும் வெண்மை அளிக்கிறது

புதிய
ஸொல்வெண்ட்
பவர்

NEW SOLVENT POWER
det
det
detergent washing cake

வேறெந்த டிடர்ஜெண்ட் கட்டியும் பாரும் இதற்கு இணையில்லை பாரும்

Shilpi DM/31 A/81 Tam

**தெ**ன்றலுக்கு
வியர்க்கிறது....
மலர் வந்து
சாமரம்
வீசுமா?

—புதுக் கவிதையைப் பொங்கல் வாழ்த்தின் உள்ளே எழுதினான் மோகன்.

கையெழுத்துப் போடாமல் கவருக்குள் போட்டான்.

உள்ளூர் முகவரிதான்.

முகவரியில் 'அனுராதா' என்று அவளது பெயரை எழுதும்போது, அவளையே முதன் முதலாகத் தொடுவது போன்ற உணர்வு.

அனுராதாவை உள்ளக் கோவிலில் வைத்து ஆராதித்து வரும் அவனால் தரிசித்து, நேரடியாகக் கூறிக் காதல் வரத்தைப் பெறத் துணிவு இல்லை.

'இப்போது வாழ்த்தை மட்டும் தெரிவிப்போம்...

இதைப் படித்தால், எங்கோ ஒரு மனம் அவளுக்காக ஏங்கித் தவிப்பதை உணர்வாள்.

....பிறகு உள்ளத்தைத் தெரிவிப்போம்.' எண்ணிக் கொண்டான், மோகன்.

• • •

**அ**கன்ற வாசலில் அப்போதுதான் உருவான அடுப்புடன் போராடிக் கொண்டிருந்தாள் அனுராதா, புகை சூழலின் நடுவே.

# உளங்கனிந்த வாழ்த்துக்கள்

பட்டுக்கோட்டை ராஜேஸ்



சற்றுத் தள்ளி, வெல்லம் நசுக்கிக் கொண்டிருந்தாள் அவனது அம்மா.

''அக்கா... பொங்கல் வாழ்த்தெல்லாம் வந்திருக்கு! பார்த்துட்டு எல்லாத்தையும் என்கிட்டே கொடுத்துடு. பிரபுகிட்டே கொடுக்காதே'' என்றாள் அவனது பத்து வயதுத் தங்கை.

கண்ணைக் கசக்கியபடியே வாழ்த்துக்களை வாங்கிக் கொண்டு கொல்லைப்புற வெளிச்சத்திற்கு வந்தான்.

ஒவ்வொன்றாய்ப் பார்த்துவிட்டுத் தங்கையிடம் கொடுத்தான். அவள் அப்படங்களின் அழகில் மூழ்கினாள்.

அந்த — கையெழுத்தில்லாத — வாழ்த்தைப் பார்த்ததும் சற்று அதிர்ந்தான். அதை மடித்து அவசர அவசரமாக ஜாக்கெட்டினுள் திணித்தான்.

மற்றவற்றைத் தங்கையிடம் கொடுத்து. ''சரி... நீ போய் அம்மாவுக்கு உதவியா வேலை பாரு... இதோ வந்துடறேன்'' என்றான்.

உள்ளே ஓடினாள் தங்கை.

ஜாக்கெட்டுக்குள்ளிருந்த அந்த வாழ்த்தை விரல்களால் நீவி, நாணத்தால் நனைந்திருந்ததைத் துகிலுரித்து எடுத்து மீண்டும் படித்தான்.

'யாராக இருக்கும்?'

'நிச்சயமாக இதை வாசுதான் அனுப்பியிருக்கணும். போன மாதம் ப்ளஸ் டு பரீட்சை எழுதும்போது முக்கியமான கேள்வியெல்லாம் குறித்து வந்து அப்பா கிட்டே கொடுத்து என்னைப் படிக்கச் சொன்னவர் வாசுதான்.'

வாசுவாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தபோது மனத்தில் மகிழ்ச்சி...

''பால் பொங்குது...பால் பொங்குது...'' வீட்டினுள் அம்மாவின் குரல்.

வாழ்த்திற்கு மறுபடியும் மெத்தையிட்டபடியே உள்ளே வந்து,

''பொங்கலோ பொங்கல்'' — தம்பி, தங்கைகளின் குரல்களோடு தன் குரலையும் கலந்தான்.

● ● ●

விக்டரி டுடோரியல் காலேஜுக்கு வாசு வந்தான்.

அன்றும் விடுமுறை என்பதால் மாணவர்கள் வரவில்லை.

பூட்டைத் திறந்தான்.

கதவின் இடுக்கு வழியே வீசப்பட்டிருந்த 'ஹிந்து' பேப்பரையும் பொங்கல் வாழ்த்துக்களையும் எடுத்துக்கொண்டு அவனது அறைக்கு வந்தான்.

வாழ்த்துக்களின் வரிசையில் வித்தியாசமாய் நின்றது ஒன்று....

தென்றல்
தானே வந்து
தழுவும்போது
மலர்
மறுக்கவா போகிறது?

—அன்புடன்
அனுராதா

எந்த அனுராதாவை மனதார நேசித்தானோ, யாருடைய அன்பிற்காக ஏங்கினானோ அவளிடமிருந்தே, அவளுடைய காதல், வந்திருந்த வாழ்த்தில் சேலியாய் மலர்ந்திருந்தது. சந்தோஷமாய் மணந்திருந்தது.

கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டு வாசு நிமிர்ந்து பார்த்தான்.

மோகன் உள்ளே வந்துகொண்டிருந்தான்.

''மோகன்! வா...வா... நல்ல சமயத்திலேதான் வந்திருக்கே! ரொம்ப நாளா என் மனசுலே உள்ள ஆசையை உன்கிட்டே சொல்லணும்னு நினைப்பேன். ஆனா... அது நிராசைதான்னு நினைச்சதாலேதான் உன்கிட்டே இவ்வளவு நாளாச் சொல்லலே. ஆனா இப்போ அது நிறைவேறுகிற ஆசைதான்னு நிரூபணம் ஆயிடுச்சு!''

''என்னடா... ரொம்பச் சந்தோஷமான விஷயமா? வார்த்தையெல்லாம் ரொம்ப படபடன்னு சொல்றே?''

''ஆமான்டா'' அந்த வாழ்த்தை மோகனிடம் கொடுத்து. ''படியேன்'' என்றான்.

அதைப் படிக்கும்போது மோகனின் மனத்தினுள் ஐந்தாறு மேளங்கள் இடியாய் முழங்கின.

ஜீரணித்துக் கொண்டவன் அழுத்தமாகவே சொன்னான். ''ஹார்ட்டி கங்கிராட்ஸ்.''

ஆந்திர, தமிழக முதலமைச்சர்கள் மாதிரி கர்நாடக முதலமைச்சர் ஒரு நடிகராக இல்லா விட்டாலும் ஒரு விதத்தில் பட உலகோடு சம்பந்தப்பட்டிருக்கிறார். அவருடைய மாப்பிள்ளை மனோகர்லால் நிகானி ஒரு படத் தயாரிப்பாளர்!

அரசியல் விஞ்ஞானத்தை முக்கிய பாடமாக எடுத்துக் கொண்டு எம்.ஏ. பட்டம் பெற்றிருக்கிறார் ராமகிருஷ்ண ஹெக்டே.

—அனிதா ராமச்சந்திரன்





# இறக்கும் முன்னரே அனுதாபத் தீர்மானம் போட்டது யாருக்கு?

ஏற்கனவே 'வருகிறோம்' என்று ஒப்புக் கொண்ட டீம் ஒன்று தவிர்க்க முடியாத காரணங்களால் வரமுடியாமல் போகவே, மதுரை மருத்துவக் கல்லூரி விடுதியை அடைந்து மாணவர்களைத் தேடியபோது உற்சாகமாகக் கலந்து கொள்ள முன் வந்தார்கள்.

1. ஏ. சோமசுந்தரம்
2. எம். மணிவண்ணன்

இவர்களைச் சந்தித்த எதிர் 'டீ'மில் இருந்த மதுரை மீனாட்சி கல்லூரி மாண விகள்

1. எம். நேரு பாப்பா
2. பி. பொற் செல்வி

இவர்கள் கேட்டுக்கொண்ட கேள்விகள்:

1. NEWS என்ற சொல் எப்படி வந்தது?
2. எந்த விளையாட்டில் கலர், கலர் பந்துகள் உபயோகப்படுத்தப் படுகின்றன, கலர்கள் என்ன?
3. கிருஷ்ணா நதி எங்கு உற்பத்தியாகிறது?
4. ஒரு சதுர அடிக்கு எத்தனை சதுர அங்குலம்?
5. ஒரு தலைவர் இறக்கும் முன்னரே அவருக்குப் பாராளுமன்றத்தில் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அந்தத் தலைவர் யார்?
6. சமீபத்தில் பத்திரிகைகளில் எஸ்.எல். வி-3 என்ற ராக்கெட்டைப் பற்றிப் படித்திருப்பீர்கள். எஸ். எல். வி.யை விரிவுபடுத்திக் கூறமுடியுமா?
7. Salary என்றால் சம்பளம். இந்த வார்த்தை எப்படி வந்தது தெரியுமா?
8. திருக்குறள் பற்றி உங்களுக்குத் தெரியும். தமிழ் இலக்கியத்தில் எந்தத் தலைப்பின் கீழ் இந்த நூல் வருகிறது? என்று தெரியுமா?
9. 1982ம் ஆண்டின் சிறந்த இந்தியப் படம் என்ன?
10. சீக்கியர்களின் மத குருவும், அவரது உபதேசங்களைத் தாங்கிய நூலின் பெயரும் என்ன?
11. பால் பாயிண்ட் பேனாவைக் கண்டு பிடித்தவர் யார்?
12. காந்தி அவர்களை 'மகாத்மா' என்று முதலில் அழைத்தவர் யார்?

பெரும்பாலான கேள்விகளுக்குப் பதில் சொல்லி ரூ. 30 பரிசைத் தட்டிச் சென்

ரூர்கள் மதுரை மருத்துவக் கல்லூரி மாண வர்கள். கலந்துகொண்ட அனைவருக்கும் புத்தகப் பரிசுகளும் வழங்கப்பட்டன.

இப்போது பதில்களைப் பார்ப்போமா?

1. North, East, West, South என்று நான்கு திசைகளிலிருந்தும் வரும் செய்திகளைக் குறிப்பதால் அவற்றின் முதல் எழுத்துக்கள் சேர்ந்து NEWS என்ற சொல் உருவானது.

2. ஸ்நூக்கர் (Snooker) என்ற விளையாட்டில். கலர்கள்: சிவப்பு, மஞ்சள், நீலம், அரக்கு, கறுப்பு, இளஞ்சிவப்பு.

3. மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில், மகாராஷ்டிரா மாநிலத்திலுள்ள மகாபலேஷ்வர் என்ற இடத்தில் உற்பத்தியாகிறது.

4. 144 சதுர அங்குலம்.

5. திரு ஜெயப்பிரகாஷ் நாராயணன்.

6. Satellite Launching vehicle

7. Salt என்றால் உப்பு. இதிலிருந்து Salarium என்று மருவி பிறகு Salary ஆயிற்று. அந்த நாட்களில் கிரேக்க நாட்டில் சம்பளத்திற்குப் பதிலாக உப்பு தந்து வந்தார்களாம்.

8. பதினெண் கீழ்க் கணக்கு என்ற தலைப்பின் கீழ் வரும் நூல்களில் இருக்குறளும் ஒன்று.

9. 'சோக்' என்ற வங்காளப் படம்.

10. குரு நானக். நூல்: கிரந்த சாஹெப்.

11. ஜான் ஜே. லாட் (John J. Laud.)

12. ரவீந்திரநாத் தாகூர்.

நன்றி: இந்த 'க்விஸ்' நடத்துவதற்கு உதவி செய்த மதுரை நண்பர்கள் திரு இசைமுத்து, வி. ராஜசேகரன் ஆகியவர்களுக்கு

தொகுப்பு: சந்திரமௌலி; பிரியன்

படங்கள்: வி. மனோ




● பெரியவருக்குப் பிடித்த காரியம் (29—5—83 இதழ்) என்ற பேட்டிக் கட்டுரையில்கண்டவாறு மாதவரம் பால் பண்ணையில் உள்ள எந்தப் பால்காரரும் கால்நடை மருத்துவர்களைக்கைக்குள் போட்டுக்கொண்டு பசுக்களை அடிமாடாக விற்க முற்படுவதில்லை. அனைவரும் பரம்பரையாக இந்து தர்மப்படி பசுக்களைத் தாயாக, தெய்வமாக, வாழ்வு தரும் வள்ளலாக வணங்கி வருபவர்கள். இங்குள்ள கால்நடை மருத்துவர்களும் தன்னலமற்ற, மேன்மையான சேவை செய்பவர்கள்.

சென்னை-51 மு. தயானந்தன், கே. ஆர். துரைசாமி, ந. ஜெயராமன், ஏ. உதயகிரி, எஸ். ராமசாமி

● கதிரைத் தினமணியுடன் இணைத்து 'இலவச இணைப்பு' என்று அறிவித்திருப்பது 'மோசடி' என்று பெரிய வார்த்தையாகப் போட்டிருக்கிறார் தராசு. (ஜூன் 19 இதழ்) அன்றைய நாளிதழின் விலை 60 காசிலிருந்து ஒரு ரூபாயாக உயர்த்தப் பட்டிருப்பதை நாங்கள் 'மறுக்கவோ மறைக்கவோ' இல்லை. பின் 'மோசடி' எங்கே வந்தது? 64 பக்கங்கள் கொண்ட வண்ண வார இதழுக்குத் தனியாக விலை இல்லை என்று வாங்குபவர்களுக்கு உணர்த்தவே இலவச இணைப்பு என்று அறிவிக்கப்படுகிறது. சில சில்லறை விற்பனையாளர்கள் இதற்கும் ஒரு விலை சொல்லி 'மோசடி' செய்யக் கூடிய வாய்ப்பைத் தவிர்க்க, இத்தகைய அறிவிப்பு தேவையல்லவா? இந்த உண்மையை எங்கள் வாசகர்கள் அத்தனை பேரும் உணர்ந்து 'இலவச இணைப்பை' அமோகமாக வரவேற்றிருக்கிறார்கள். தராசுக்குத்தான் பாவம், ஏதோ தடுமாற்றம்.

சென்னை கி. கஸ்தூரி ரங்கன்
பொறுப்பாசிரியர் தினமணி கதிர்

தினமணி கதிருக்கு அமோக வரவேற்பளிப்பவருள் ஒருவர்தான் தராசு 'மோசடி' என்ற சொல் கடுமையானதாக இருக்கலாம். ஆனால் சிந்தனையில் தடுமாற்றம் ஏதுமில்லை. ஏற்கெனவே தினமணி 'சுடர்' என்று தரப்பட்டு வந்ததை நிறுத்தி விட்டனர். அதன் இடத்தில்தான் கதிர் தரப்படுகிறது. அன்றைய நாளிதழின் விலையும் கணிசமாகக் கூடியிருப்பதாகக் கஸ்தூரி ரங்கனே ஒப்புக் கொள்கிறார். பிறகு இலவசம் எங்கிருந்து வந்தது? சில்லறை வியாபாரிகள் மோசடி செய்வார்கள் எனவும் வாசகர்கள் ஏமாந்து போவார்கள் என்றும் கஸ்தூரி ரங்கன் கருதுவாரேயானால் ஞாயிறு தினமணியுடன் கதிர் இணைந்துவருவதைச்சரியான பதப்பிரயோகத்துடன் அவர்அறிவிக்கலாமே?
-ஆர்]

● மார்த்தாண்டம் நேயர் குடம், பானை இரண்டும் குமரி மாவட்டத்தில் ஒன்றுதான் என்று எழுதியிருக்கிறார். அந்த மாவட்டத்தில் எங்கும், எத்தருணத்திலும் எவரும் குடத்தைப் பானை என்று சொன்னது இடையாது சொல்வதுமில்லை. நேசமணியின் தேர்தல் சின்னம் குடமே.

அனந்தநாடார்குடி எம். ஜே. மார்ட்டின்

● வினுதாவின் ''தயவுசெய்து என் மனைவியைக் கொல்லுங்கள்'' சிறுகதை படிக்க வித்தியாசமாகவும் விறுவிறுப்பாகவும் அமைந்திருந்தது.

ஊசூர்வெளிக்கடை ராஜன்

● நெடுமாறன் அவர்களிடம் கேட்கப்பட்டிருக்கும் கேள்விகள் ஆழமானவையாகவும், அதற்கு அவரது பதில்கள் ஒவ்வொன்றும் அழுத்தமாகவும் உள்ளது.

மே. மாம்பலம் எஸ். மோகன்

● சமீப காலமாக கல்கி அட்டைப் படங்கள் தான் ஜொலிப்பு ஜமாய்த்து வருவது கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது.

வியாசர் காலனி திருமதி நாராயணராவ்

● கலைஞர்க்குக் கிட்டப்பா கேட்டிருந்த கேள்விகளும், கிட்டப்பாவிற்குப் பாலு கேட்டிருந்த கேள்விகளும் சிறப்பாக இருந்தன. குறிப்பிட்டவர்களிடமிருந்து பதிலையும் பெற்றுப் பிரசுரித்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

கோவை தி. சுந்தரேசன்

● மன அமைதிக்காகப் பலர், பல இடங்களை நாடிச் செல்லுகிறபோது, எவ்வித வம்பு தும்புமில்லாத 'ஆழ்நிலைத் தியானத்தை'க் கடைப்பிடித்தால் சிறந்து வாழலாம்.

அத்திமலைப்பட்டு மதுஜெயபால்

● அண்ணாவின் டயரிகள் அமர்க்களமா யிருந்தது முகுந்தன் ஸார், கீப் இட் அப்!

காட்பாடி ராஜேஷ்

## அத்தியாயம் 25

தொட்டி ஆளுக்குக் கண் மூடிய போதெல்லாம் பொத பொதவென்று மூஸல் கொட்டுகிற ஓசை கேட்டது. பொறுமிப் பொறுமிக் கண் வெந்தது. நெஞ்சு எரிந்தது.

வர - போற டிரைவர், கிளீனரை மடக்கி உட்கார வச்சு ஒருக்களிச்ச பல்லு காட்டி மூஸல் வாங்கறோம். வாங்கனதுல எட்டணா லாபம் வச்சு விக்கிறோம். வித்தவனுக்கு எட்டணா லாபம். வாங்கறவனுக்கு எட்டணா லாபம். இதுல ஒரு ஞாயம் இருக்கு. இவனுங்க என்னடான்னா பூமில ஒட்டப் போட்டு பேர் பாதி விலைக்கு விக்கிறான். அதும் கடனு விக்கிறான். அப்பத் தொட்டிக்காரன் என்னா தலைல துணியைப் போட்டுக்கினு போறதா. இதை இப்பிடியே வுடறதில்ல. ரெண்டுல ஒன்னு பாத்துடணும்.

ஒரு ஆயில் கம்பெனியின் டெலிபோன் பகல் பொழுதில் அவலமாய் அடித்தது. ஏதோ ஒரு குரல் புதிதாய் பரபரப்பாய் ஒரு விஷயம் சொல்லியது. அதிகாரிகள் திகைத்துப் போனார்கள். காரில் ஏறி பயத்துடன் சேரியை வலம் வந்தார்கள். மறுபடி கம்பெனிக்கு வந்து டெல்லி பம்பாய்க்குச் சேதி சொன்னார்கள். உத்தரவுக்குக் காத்திருந்தார்கள். கையோடு பிடுங்கிக்கொண்ட வால்வுத் திருகுக்குப் பின்னால் எண்ணெய் கொப்பளித்துச் சிதறுவது போல நகரத்தின் எட்டுத் திக்குக்கும் உத்தரவு பறந்தன. மந்திரிகள் பேசினார்கள். மறுபடி ஆயில் கம்பெனிக் கார்கள் சேரியை வட்டமிட்டன. அதிகாரிகள் உள்ளிருந்தபடியே வரைபடம் பிரித்துப் பார்த்துப் பைப் லைன் தடம் உறுதிசெய்து கொண்டார்கள். சேரிக்கு உள்ளே போகப் பயந்தார்கள்.

இந்த லேசான மாற்றங்கள் அவனை நிமிர்த்திற்று. ஏதோ தவறு நடந்துவிட்டது என்று தெரிந்து போயிற்று. சகலமும்



# இரும்பு குதிரைகள்

— பாலகுமாரன் —



மறைத்து விடலாமா என்று யோசித்தான். அதற்கு அதிக நேரம் ஆகும். மாதக் கணக் காய்ப்பொருத்தி வைக்கப்பட்ட வால்வுகளைக் கழற்ற நீண்ட நேரம் பிடிக்கும். அவன் யோசனையுடன் கறிக்கடை வாசலில் உட்கார்ந்து கொண்டான். வால்வுகளை இறுக்கி விட்டுத் தன் ஆட்களை உடனே வெளியூர் போகக் கட்டளையிட்டான். காத்திருந்தான். சேரியைக் கலைத்து விடுவார்களா என்று கவனித்தான்.

கடற்காற்று நகருக்குத் திரும்பிய மாலை வேளையில் போலீஸ் லாரிகள் ரயில்வே லைனைத் தாண்டி வந்தன. சேரியை வளைத்துக்கொண்டன.

பெரிய போலீஸ் படைகளோடு எல்லா ஆயில் கம்பெனி அதிகாரிகளும் உள்ளே நுழைந்தார்கள். குடிசை குடிசையாய்ப் பார்த்தார்கள். பூட்டியிருந்த குடிசைக் கதவை உதைத்துத் திறந்தார்கள்.

''மார்வலஸ் ஐ லே. மார்வலஸ்'' பைப்லைன் வேலை முழுவதும் அறிந்த ஆயில் கம்பெனி இன்ஜினியர் வியப்போடு கன்னத்தில் கைவைத்து அந்த வால்வுகளின் எதிரே குத்திட்டு உட்கார்ந்தார். அவை இறக்குமதி செய்யப்பட்ட உயர் ரக வால்வுகள். பிசிறில்லாத நுல்லிய இணைப்புக்கள். அழுத்தம் குறைவதற்காக உயரமாக்கப்பட்டு, வலப்பக்கம் மடிக்கப்பட்டு நுண்ணிய பௌதிக அறிவுடன் கூடியசெயல். இந்த இணைப்பு ஒரு நாளும் நெகிழாது. ஒரு நாளும் வெடிக்காது. மார்வலஸ். ரியலி மார்வலஸ்.

சேரியைப் போலீஸில் பிய்த்து எடுத்தார்கள். சட்டி பானைகளை உருட்டினார்கள். பெண்களையும் குழந்தைகளையும் மிரட்டினார்கள். நடமாடிய ஆண்களைப் பிடித்துப் பளீர் பளீரென்று அறைந்தார்கள்.

''யாருது அந்தக் குடிசை? எவன் வேலை இது? சொல்லு. சொல்லு. சொல்லுடா.''

அவன் கண் சிவக்கக் கறிக் கடை வாசலில் உட்கார்ந்திருந்தான்.

தன் தாய்மீது கனத்த பூட்ஸ்கள் மிதித்துப் புழுதி பறப்பதைப் பார்த்துத் துடித்தான்.

''மலை திருடுறேனுங்க. வால்வுபோட்டா.. எங்க அது... உன்றயா. வழி வுடு. வழி வுடு பார்க்கலாம்.'' தொட்டி ஆள் குதூகலத்துடன் குறுக்கும் நெடுக்கும் நடந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

கறிக் கடையில் உட்கார்ந்திருந்த அவனுக்குப் பொறி தட்டியது. சேரியில் உள்ள ஒரு பூச்சிகூட அவன் பெயரை உச்சரிக்கவில்லை. எல்லா ஹிம்சைக்கும் தெரியாது தெரியாது என்றே பதில் வந்தது.

'பேர்பாதி விலைக்கு அதுவும் கடனு—எப்படினு கட்டுபடி ஆவுதுன்னு பார்த்தேன். புதையலு மாதிரி எடுத்தா பேர் பாதி என்னு தம்பிடிக்கு நாது விட்டர் விக்கலாம்ப்பா. பேர் பாதின்னு கொன்லே



யில்ல இது.' தொட்டி ஆள் மகிழ்ச்சி தாங்காமல் குதித்துக் கொண்டிருந்தான்.

அவன் கறிக் கடையை விட்டு நகர்ந்தான். தொட்டி ஆள் பற்றி விவரம் சேகரித்தான். தொட்டி ஆள் குதிப்பதையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

வால்வுகள் பிடுங்கப்பட்டன. விரல் அகல ஓட்டை அடைக்கப்பட்டது. சேரி அழிந்து போயிற்று. இருட்டும் நேரத்தில் பெண்கள் அழுகுரல் மட்டுமே பெட்ரோல் வாசனை போல் நிறைந்திருந்தது.

கறிக்கடை மூடும் நேரம். ''இனி ஒனக்கு இங்க வேலை இல்ல பாய். வேற எடத்துல கடை போடு. இந்தக் கத்தி நான் வச்சுக் கிறேன். நீ வேற வாங்கிக்க.'' சரட்டென்று கடைக்குள் நுழைந்து மாமிசம் வெட்டும் பெரிய கத்தியை எடுத்து லுங்கிக்குள் செருகிக் கொண்டான். மல் ஜிப்பாவைத் தழைய விட்டுக் கொண்டான்.

நன்கு இருட்டிய நேரத்தில் தொட்டியை நோக்கி வந்தான்.

தொட்டியில் இருபத்தைந்து வாட்ஸ் பல்பு எரிந்து கொண்டிருந்தது. ஒரு டீசல் டேங்க் மெல்லக் கிளம்பிற்று. ''மாயவரம் போகுது. டிக்கட் இருந்தாச் சொல்லு'' எவன் குரலோ கேட்டது.

''என்னங்க வேணும்? டீசலா? கானலை வாங்க தரேன். எவ்வளோ வேணும்?''

அவன் பதில் பேசாமல் இருந்தான்.

தொட்டி ஆள் நெருங்கி அவன் முகத்தை ஒற்றை விளக்கு வெளிச்சத்தில் உற்றுப் பார்க்க நிதானமாய்ப் பேசினான்:

''ஒனக்குச் சாமர்த்தியம் இருந்தா நீ சம்பாதிக்கணும். அடுத்தவன் பொழப்புல மண்ணு போடலாமா?''

''என்ன... என்ன சொல்றே நீ? ''

''ஒரு சேரிய அநியாயமா கலைச்சிட்டியே''

''நானு... எந்தச் சேரி?''

''ஒனக்கு வியாபாரம் படுத்துப் போச்சின்னு அவனுங்க என்ன செய்வானுங்க?''

''அடப் போய்யா. ஊத்துப் போட்டுத் தண்ணி எடுக்கிற மாதிரி டீசல் எடுக்கறான். என்னவோ பரிஞ்சிக்கிறு வரியே சேரி ஜனங்களுக்கு.''

''ஒரு ஆளா ரெண்டு ஆளா. நூறு நூத்தியம்பது ஜனமில்ல திண்டாடுது. சம்பந்தமில்லாத பத்துப் பேரு லாக்கப்புல ஒதபட வச்சிட்டியே.''

''இப்பச் சொல்லு. நீ சொல்லு. எவன் அந்த ஓட்டபோட்ட பேமானின்னு சொல்லு. ஒரு போன் அடிச்சாப் போதும். தபதபன்னு வந்து தள்ளிக்கிறு போய்டுவாங்க. அவனை மட்டும் உள்ற தள்ளி வுட்டுர்றேன்.''

''அவனை உள்ற தள்ளி விட்டுட்டு நீ ஒக்காந்து சாப்பிடுவியா?''

''ஏன்... என்னு தலையைச் சீவிப்புடுவாங்களா, எனக்கும் ஆள் படை உண்டு. ஒண்ணும் புடுங்க முடியாது.''

''நீ தகிரியமான ஆம்பிளையா இருந்தா போய் ஆள் பாத்துக் கேட்டுருக்கணும்.''

''என்னுத்தக் கேக்றது.''

''எனக்கும் ஓட்டப் போட்டுக் குடுரு. நானும் பொழைச்சுக்கிறேன்னு கேட்டுருக்கணும்.''

''யாரு...யாரு...யாரு...நீ?''

''ஓட்டப் போட்டவன்.''

''இருக்கட்டும். என்னுண்ட வந்து ஏன் மோதறே.''

''காட்டிக் குடுத்தவனோட மோதாத கல்லு சொவுத்துலயா மோதுவாங்க?''

''யோவ் சட்டைய வுடு. சட்டைய வுடு. கோபாலு.... மணி.... டேய் சட்டையை வுடுரு.''

ஒரு உலுக்கலில் தொட்டி ஆளின் பணப் பை எகிறித் தரையில் விழுந்தது. கண்களில் மரண பயம் தரையில் விழுந்த நாணயங்கள் மாதிரி பளபளத்தது.

''கேடு கெட்ட நாயே. ஒரு சேரியையே கலைச்சிட்டியேடா.''

ஆட்கள் ஓடிவந்து இருவரையும் சூழ்ந்து கொள்ளத் தொட்டி ஆள் திமிறினான்.

''கலைப்பேன். என் வவுத்துல அடிச்சா நானும் வவுத்துல அடிப்பேன். வுட்ரு சட்டையை.''

சட்டையைத் தளர விட்டுப் பளிச்சென்று தொட்டி ஆளை வலுவு கொண்ட மட்டும் பின்னால் தள்ளினான். கூட்டத்தைப் பிளந்து விழுந்த தொட்டி ஆள் எழுந்து தள்ளாடி நிற்கையில் இடுப்பில் கை விட்டு மாமிசம் வெட்டும் கத்தியை எடுத்தான். அவன் நிமிர்வதற்குள் கழுத்தில் வெட்டினான். மறுபடி உறுதியாய்க் கத்தியைப் பிடித்துக் குனிந்த நடுத் தலையில் வெட்டினான்.

ரத்தம் எண்ணெய் போலப் பீச்சி அடித்தது. தரையெங்கும் தெறித்தது. சுற்றி நின்றவர்கள் தலை தெறிக்க ஓடினார்கள். அவன் நாற்றம் நிறைந்த கால்வாய்க்கரையில் இறங்கி நடந்து இருளில் மறைந்தான்.

**ஆ**யில் கம்பெனி அதிகாரிகள் கூட்டம் போட்டார்கள். தொட்டி பற்றியும் பேசினார்கள். எப்படித் தடுப்பது என்று கேட்டுக் கொண்டார்கள்.

மறுபடி டெலிபோன் அடித்தது. ''நான் பூண்டி முதலியார் வண்டி டிரைவர் பேச

நடிகை: ஆனாலும் உங்க பத்திரிகை நிருபருக்கு ரொம்ப 'திமிர்' சார்!
எடிட்டர்: ஏன்?
நடிகை: என் பேட்டியைப் போட்டுட்டு ''பின்னணிக் குரல் கொடுத்தவர் அம்மா''ன்னு போட்டிருக்கிங்களே!

—ஆர். வசந்தகுமார்



றேங்க. வண்டி நம்பர் பதினெட்டு நாப்பத்தாறுங்க. பகல் மூனு மணிக்கு 'மாயவரம் லோட் புடிச்சதுங்க. தொட்டில பேர்பாதி எறக்கிட்டுத் துட்டு வாங்கிக்கினு வண்டி போவுதுங்க. இப்பத்தாங்க தொட்டி வுட்டு வண்டி போவுது. பின்னாடியே போனா பல்லாவரத்துல புடிச்சுடலாங்க. எம் பேர் என்னாத்துக்குங்க. உண்மை விளம்பின்னு வச்சுக்கங்க'' பொய்க் கூட்டத்தில் திருட்டு ஆட்டத்தில் சண்டையிட்டவன் தோற்றுப் போனதால் உண்மை விளம்பி ஆனான். காட்டிக் கொடுத்தான்.

''கோ டேக் எ கார். சேஸ் தெட் பாஸ்டர்ட். ஜெய்ல் ஹிம்.'' யாரோ நாலு பேருக்கு உத்தரவு விழுந்தது.

பூண்டி முதலியார் வண்டியை வழியில் மடக்கிச் சோதிக்க அதிகாரிகள் கிளம்பினார்கள். ஆனால் பூண்டி முதலியாருக்குச் சகல இடங்களிலும் செல்வாக்கு இருந்தது. அந்தச் செல்வாக்குக்கு அவர் அதிகம் செலவழித்திருந்தார். அவர் வண்டியைத் துரத்துகிற செய்தியை அடுத்த மூன்று நிமிடத்தில் தெரிந்து கொண்டார். மூத்த மகனை அழைத்து விவரம் சொல்லி அவன் காதோடு ரகசியமாய்ச் சில கட்டளைகள் இட்டார். பையன் புல்லட் மோட்டார் சைக்கிளில் பேயாய்ப் பறந்தான். டாங்கர் வண்டி கிண்டி தாண்டுமுன் மடக்கிவிட்டான். இருட்டுச் சந்தில் மறைந்தான். இன்னொரு லாரியில் காலி பேரல்களைக் கொண்டு வந்து சீலை உடைத்து ஆறாயிரம் லிட்டர் டீஸலை டாங்கரிலிருந்து பேரலுக்கு மாற்றினான். பேரல் லாரியைப் போகச் சொன்னான்.

வரதன்... நீங்க புது டிரைவர் இல்ல. இந்த லாரில கொஞ்சம் தப்பு நடந்துபோச்சு. நாம டீஸல் தொட்டில இறக்கினது ஆயில் கம்பெனில தெரிஞ்சு போச்சு. வண்டியை மடக்கறதுக்கு ஆள் கௌம்பியிருக்கு. நீங்க என்ன செய்யணும்னா...'' வரதன் காதோடு விஷயம் சொன்னான்.

வரதனுக்கு அதிர்ச்சியாய் இருந்தது. தான் எது தொட்டாலும் அது உருப்படியாகாமல் போவதை நினைந்து நினைந்து வேதனை படர்ந்தது.

''வேற வழியில்லையா?''

''இல்ல. வரதன்.''

''எந்த எடத்துல செய்யணும்?''

''பல்லாவரம் முன்னாடியே செய்துடுங்க. இருட்டு எடமாப் பார்த்து முடிச்சிடுங்க. நானும் பின்னாடியே வரேன்.''

டாங்கரைச் சந்திலிருந்து ரிவர்ஸ் எடுத்து கிண்டி பரங்கிமலை தாண்டி மீனம்பாக்கம் கடந்து மெல்லச் சாலை ஓரம் நகர்த்திப் பொட்டலாய் இருக்கிற இடம் பார்த்து நிறுத்தினான். மோட்டார் சைக்கிள் பின்னால் வந்து நின்றது.

''இங்க நிறுத்தினா எப்படி? மேட்டுல ஏத்துங்க சீக்கிரம்.''

''மனசாவல சார்.''

''துத்தேறி. யார்யா நீ... நேரங் காலம் தெரியாத உருகற. சீக்கிரம் முடி. பேசினதுக்கு மேல துட்டுப் போட்டுத் தரேன். **எடுய்யா வண்டியை.''** மெல்ல இடப் பக்கம்



பெண்ணின் தகப்பனார்: பார்த்த வரன் எப்படி?
தரகர்: பையன் ''பூனை போல'' இருப்பான். பரம சாது.
பெண்ணின் தகப்பனார்: அப்ப வேணும்! நான் என் பெண்ணைக் ''கிளி''மாதிரி வளர்த்திருக்கேன்.

—வெ. சீதாராமன்

நகர்த்தி மேட்டில் ஏற்றிப் பள்ளத்து விளிம்பில் முன்சக்கரங்களைச் சரிந்து வண்டி சரியும் நிலைக்குக் கொண்டு வந்து பின் கதவைத் திறந்து பார்த்தான்.

''ஆக்ஸிலேட்டரை அழுத்திட்டு எகிறிக் குதிச்சிரு. வண்டி அப்படியே கவுந்துக்கும். ம்ம்... மெறி சீக்கிரம்.''

''இடப் பக்கம் சாய்க்கிறதா வலப் பக்கம் சாய்க்கிறதா.''

''கூறுகெட்ட முண்டம். வலப் பக்கம் சாய்ச்சா கூழாப் பூடுவே. இடப் பக்கம் ஒடிக்க சரிச்சிடு. சரியற போது எகிறிக் குதிச்சிடு. மெறி, மெறி. சீக்கிரம்.''

வண்டி உறுமிக் கொண்டு பள்ளத்தில் சரிந்து பூவாய் மண் இறங்க வலப் பக்க சக்கரம் தூக்கியபடி இடப்பக்கம் மெல்லச் சரிந்தது. வரதன் தன் பையோடு உள்ள டிரைவிங் லைசென்சை வெளியே தூக்கிப் போட்டான்.

''குதி குதி... குதிச்சிடுய்யா.''

குதிக்கிற நேரத்தில் இடது கால் செருப்பு தட்டி எகிற முடியாமல் தடுமாறி முழங்காலில் இடித்துக் கொண்டு நாட்டிக்கொண்டபடியால் வலக்கால் வழுக்கி கை கால் விரித்து ஸ்டியரிங்கில் முதுகு மோதி சந்தில் சரிந்து க்ளீனர் சீட்டில் அடிபட்டு கேபின் உச்சியில் தலை முட்டி மறுபடி வண்டி பல்டி அடிக்க உள்ளே நங் நங்கென்று அடிபட்டுக் குப்புற விழுந்து. லாரியின் உள்ளே அலை மோதுகிற மூவாயிரத்துச் சொச்ச டீஸலால் மறுபடி புரட்டப்பட வலப்பக்க ஸ்டியரிங்குக்கும் தரைக்கும் நடுவே கழுத்து மாட்டி வலியில் கோரமாய்க் கத்தி நாசித் துவாரங்களில் ரத்தம் வர மூன்றாவது நிமிடம் செத்துப் போனான்.

மோட்டார் சைக்கிள் காணாமல் போயிற்று. வரதனுடைய டிரைவிங்-லைசென்ஸ் மட்டும் பையில் பத்திரமாக மடிக்கப்பட்டுப் புல் தரையில் கிடந்தது.

(தொடரும்)




○ ரா. அசோகன், சென்னை-23

? குங்குமம் இதழில் சேலம் விபச்சாரம் கட்டுரை படித்தீர்களா?

! அபசாரம் ஏதுமில்லை — சீர்திருத்தக் கண்ணோட்டத்தில் பிரசுரித்திருந்தால். நடவடிக்கை எடுக்க வேண்டியவர்களின் உறக்கத்தைக் கலைத்து உசுப்பி விடுமானால்...

○ டி. ஸ்ரீனிவாசன், திருச்சி

? கையில் அணுகுண்டுடன் நார்மன் என்ற இழவர் நடமாடி எல்லோரையும் கிடுகிடுக்க வைத்ததாகத் தினமலர் செய்தி கூறுகிறதே உண்மையாக இருக்குமா?

! இருக்கும். அமெரிக்காவில் கெட்டிக்காரக் கல்லூரி மாணவர்கள் கூட அணுகுண்டு சிறிய அளவில் தயாரிக்கும் ஆற்றலைப் பெற்றுள்ளார்கள். இதனால் ஏற்படக் கூடிய ஆபத்துக்களை அனைவரும் உணர்ந்து நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். என்ன செய்ய? வினை விதைத்தவன் தினை அறுக்கவா முடியும்?

○ ஆர். விமலா வித்யா, நாமக்கல்

? பம்பாய் மில் தொழிலாளர் போராட்டம் தோற்கக் காரணம்? (1) நீண்ட காலப் போராட்டமா? (2) தத்தா சமந்தின் வழிகாட்டலா? (3) மில் அதிபர்கள் சூழ்ச்சியா? (4) அரசின் தந்திர அடக்குமுறையா? (5) தொழிலாளர்களின் ஒற்றுமை இன்மையா?

! நெம்பர் (2) கிட்டத்தட்ட சரி. தத்தா சமந்த் வழிகாட்டவில்லை, படுகுழியைக் காட்டினார்.

○ பா. சரவணன், பல்லாவரம்

? காய்கறிகளின் விலை ராக்கெட் உயரத்துக்குச் சென்றுவிட்டதே?

! காய்கறி வாங்குபவருக்குத்தானே அந்தக் கவலை? கடையில் கண்ணால் பார்த்துவிட்டு வந்து சாப்பாட்டின்போது பார்த்ததை நினைத்துக் கொண்டே அள்ளிப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான். வைட்டமின் மாத்திரைகள் காய்கறிகளை விட மலிவு.

○ கோ. பாஸ்கர், இளங்கார்குடி

? கல்வியுமா இப்படி? சிலுக்கு புராணம் பாடி அசிங்க வரலாற்றுக்கு ஆபரணம் சூட்டுவது போல் புதுக் கவிதை ஒரு கேடா?

! கார்டூனிலிருந்த கிண்டலையும் புதுக் கவிதையில் புகுந்திருந்த வேதனையையும் உணர்ந்து ரசித்திருந்தால் இந்தக் கேள்வி பிறந்திருக்காது.

○ கோரு, காட்பாடி

? ஜனதா சந்திரசேகரின் பாத யாத்திரையால் விளைந்த பயன் என்ன?

! (1) ஜனதா கட்சிக்கு எக்கச்சக்க பணம் சேர்ந்தது. (கிட்டத்தட்ட ஒரு கோடி என்கின்றனர்) (2) சந்திரசேகர் இந்திய கிராமங்களையும் அங்கு வாழும் மக்களின் பிரச்னைகளையும் புரிந்து கொள்ள முடிந்தது. (3) மக்களுக்கு ஜனதா தலைவரிடம் மதிப்பு மிகுந்தது. நம் பிரச்னைகளைப் புரிந்து கொண்டு நம்மிடம் அனுதாபப்படவேணும் ஒருவர் இருக்கிறார் என்ற திருப்தி. (4) ஆளும் கட்சிக்கு ஒரு அதிர்ச்சி வைத்தியம் நடந்தது. பல மாநிலங்களில் இ. காங்கிரஸ் பிரமுகர்களே அவரை எதிர்கொண்டழைத்துப் புகழ் பெற முயன்றனர். (5) அந்தரங்க சுத்தியோடு மேற்கொள்ளப்படும் புனித பாத யாத்திரையின் மகிமையை நராக புரிந்து கொள்ள முடிந்தது.

○ எஸ். ரவீந்திரன், கடலூர்

? தாட்சரின் வெற்றி, பரூக் அப்துல்லாவின் வெற்றி ஒப்பிடவும்.

! ஜனநாயகப் பண்புகளின் வெற்றி — பிரிட்டனில் தேர்தல்; ஜனநாயக அநாகரிகங்களின் வெற்றி — காஷ்மீரில் தேர்தல்.

○ வி. கே. துரைசாமி அய்யர், திருச்சி-5

? அண்மையில் பாரதீய ஜனதா தென்னகத் தலைவர் களைக் கோவையில் அரிவாள் கொண்டு தாக்கிய நிகழ்ச்சி பற்றி....?

! அக்கட்சியைச் சேர்ந்த ஒருவர் பொதுக் கூட்டத்தில் முஸ்லிம் மதத்தை இழிவாகப் பேசியதுதான் காரணம் என்று வந்த செய்தி உண்மையெனில் பா. ஜ. வருத்தம் தெரிவிப்பது அவசியம். உண்மை என்றே கொள்வோமாயினும் அதற்காக இந்தப் பதில் தாக்குதல் இஸ்லாமிய அன்டர்களுக்கோ அம்மதத்துக்கோ பெருமை சேர்க்காது. வைவே இஸ்லாமியத் தலைவர்களும் வருத்தம் தெரிவிப்பது நலம். மதத்தின் பெயரால் அன்பு வளர வேண்டுமே தவிர ஆவேசங்கள் அல்ல.

○ ஜயந்த்





○ பிரதிவாதி பயங்கரம்

# நீங்கள் கேட்டவை — தராசு

○ இரணியல் தயா, அசமந்தகரை

? பேசாமல் நீங்களும் ஒரு கல்வி வாங்கினால் ஒரு ஞாயிறு தினசரி இரும் என்று அறிவித்து விடுங்களேன்? ஒரு கல்வி விலை ரூ. 2.50 என்று வைத்துவிட்டால் போச்சு?

! என்னய்யா கிண்டலா பண்ணுகிறீர்! கஸ்தூரி ரங்கன் ஏற்கனவே ரொம்பக் கோபமாய் இருக்கிறார் தெரியுமா! வட்ட மேஜை காண்க.

○ கரந்தை து. சுவாமிநாதன், தஞ்சை-2

? சாராய லைசென்ஸ் சம்பந்தமாக லட்சக் கணக்கில் லஞ்சம் வாங்கியதாக எம். ஜி. சக்கரபாணி, குமார் ஆகியோர் மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டும், நடக்கின்ற கமிஷன் விசாரணையும் எம். ஜி. ஆருக்குத் தலை குனிவுதானே?

! கமிஷன் தீர்ப்பு என்னவானாலும் சரி. (1) விசாரணை நடப்பதே முதல்வருக்குத் தலை குனிவுதான். (2) சகோதரரும் அவர் மகனும் செய்தவற்றுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று வாதிட்டு ஒரு முதல்வர் தப்பிக்கப் பார்ப்பது அதைவிடப் பெரிய தலைகுனிவு. பில்லி கார்ட்டர் நடத்திய பேரம் கார்ட்டரைத் தேர்தலில் தோல்வியுறச் செய்தது அமெரிக்காவில். அத்தகைய ஜனநாயக மரபு இந்நாட்டில் வளர்வது எப்போது?

○ எஸ். ராஜகோபாலன், திருக்கோவிலூர் ★

? ரயில் விபத்துக்கு முடிவே இல்லையா?

! அதற்கு மட்டுமென்ன. அமைச்சர்களின் உளறல்களுக்கும் முடிவே இல்லை என்றுதான் தோன்றுகிறது. பதினொரு பேர் மடிந்த லெவல் கிராஸிங் விபத்தைப் பார்வையிட வந்த ரயில்வே அமைச்சர் ஷரீஃப் எல்லா லெவல் கிராஸிங்குகளுக்கும் ஆள் போட முடியாது. வளைவு இன்றி பார்வையை மறைக்காத லெவல் கிராஸிங்குகளில் கேட் கீப்பர் தேவையில்லை என்கிறார். அதே சமயம் இந்த சன்னசந்திரா விபத்து நடந்த இடத்தில் வளைவு இல்லை. ரயில் பாதை நேராக உள்ளது என்றும் ஒப்புக்கொள்கிறார்.

○ எஸ். கணேசன், திருநெல்வேலி

? பத்திரிகைகள் மூலம் ஒருவரையொருவர் தாக்கி எழுதும் இரு பத்திரிகை ஆசிரியர்களும் சந்தித்தால்.....?

! எழுத்திலேகாணப்படாத மரியாதையைப் பேச்சிலே காட்டுவார்கள்.

○ வி. வி. ராமன், மின்பாறை

? இதயம் பேசுகிறது - துக்ளக் லடாய் பற்றி?

! சரித்திரத்தில் இடம் பெறக் கூடிய முக்கியமான சர்ச்சையாக வளர்ந்திருக்கலாம் — நாறு அடித்து விட்டார்கள்.



○ [illegible]



○ திருமதி தாட்சர்

○ இளஞ்சேரன், கோபி

? இந்தியப் பிரச்னைகள் குறித்து வெளிநாட்டில் பிரதமர் அளித்த பேட்டி பற்றி....

! நமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை யெல்லாம் அவர் திரும்பி வந்ததும் தேசாய்—ஹெர்ஷ் விவகாரம் பற்றிப் பட்டும் படாமலும் ஏதோ சொல்லிக் கெடுத்துக் கொண்டு விட்டார். தாம் பிரதமராய் இருந்த காலத்தில் தமது அமைச்சரவையில் இருந்த ஒருவர் அமெரிக்க உளவாளியாகப் பணியாற்றினார் என்று அவதூறு சுமத்தப் பட்டிருக்கும் போது அது பற்றித் தமக்கு ஒன்றும் தெரியாதது போலும் தமக்குப் பொறுப்பு ஏதும் இல்லாதது போலும் பிரதமர் பேசியிருப்பது வெட்கக்கேடு.

○ மகேந்திரன், புதுவை

? பார்ப்பதும் பொய், கேட்பதும் பொய் தீர விசாரிப்பது மட்டும் எப்படி உண்மையாகிவிடும்?

! புதுவைக் கூட்டணி அரசுக்கு இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கடி நிலையில் உங்கள் லெஃப்டினண்ட் கவர்னர் பார்த்த கேட்ட பொய்களைத் தவிர்த்துத் தீர விசாரித்து அறிகிறாரா என்பதைத் தீர விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள். உங்கள் கேள்விக்குப் பதில் கிடைக்கும்.

○ கோவிந்தன், சிங்கப்பெருமாள்கோயில்

? பிரதிவாதி பயங்கரம் என்று ஏன் பெயர் வந்தது?

! 94வது வயதில் பழுத்த பழமாக வைகுண்ட பதவி அடைந்த அண்ணங்கராச்சாரியார் பிரதிவாதி பயங்கரம் என்ற வம்சத்திலே உதித்தவர். அதாவது ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தின் உயர்வு பற்றிய இம்மரபினரது வாதங்கள் முன் யாரும் நிற்க முடியாது, அத்தனை வலுவானவை என்று அர்த்தம். வேத சாஸ்திர புராண பக்தி இலக்கியங்களைக் கரைத்துக் குடித்து இவற்றைப் பொருத்த மட்டில் நடமாடும் என்சைக்ளோபீடியா என்று கருதப்பட்ட ஞானி எந்த வரியைச் சொன்னாலும் பாடலை முழுதுமாகக் கூறி விடுவார். 18 மொழிகளைக் கற்றதுடன் ஏராளமான நூல்களை எழுதியவர். அவற்றுள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துக்கு எழுதிய உரை மிகச் சிறந்ததென மதிக்கப்படுகிறது. ஸ்ரீ ராமானுஜர் என்ற ஸ்ரீ வைஷ்ணவப் பத்திரிகையின் ஆசிரியராகவும் திகழ்ந்தார்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எஸ். ராஜகோபாலன்,
94-ஏ, கிழக்குத் தெரு
திருக்கோவிலூர்
605757 (தெ. ஆ. மாவ.)

# வேலிக்கு வெளியே சில பூக்கள்

ஒவ்வொரு மொழிக்கும் அது பேசப்படும் இடத்தைச் சார்ந்த கலாசார வாசனை உண்டு.

அந்த வாசனை அந்தந்த மொழிகளின் இலக்கியங்கள் மீது அடிக்கும்.

அந்த வாசனைதான் அந்தந்த இலக்கியத்தின் தனித்துவம்.

அந்தத் தனித்துவம்தான் ஓர் எஸ்கிமோவின் கவிதையைச் சில்லென்று வைத்திருக்கிறது.

ஓர் அரேபியக் கவிதையைச் சூடேற்றுகிறது.

எனவேதான் ஒரு வாசகன் எஸ்கிமோவின் ஸ்லெட்ஜ் வண்டியிலும் பாலைவனத்தானின் ஒட்டகத்திலும் பயணம் செய்து பார்க்க முடிகிறது.

அந்த மாதிரி இலக்கியங்களைப் பயிலும் போதெல்லாம் மனசு அந்தந்தத் தேசத்துக் காற்றையும், அந்தந்தத் தேசத்து மண்ணையும் மோப்பம் பிடித்துக் கொள்கிறது.

தன் பெயர் தெரியாமல் அப்படி ஒருவன் கரைந்து காணுமல் போகும் நிமிஷங்களில் படிப்பவனுக்குள் படைத்தவன் நிறந் தெரியாத ரத்தத்தைப் பாய்ச்சுகிறான்.

● ● ●

பைபிளின் உன்னதப் பாட்டு அப்படி என்னைத் திசை தெரியாமல் இக்குமுக்காட வைத்திருக்கிறது.

பைபிளை மொழி பெயர்த்தவர்கள் பாதிக் கவிஞர்களாகவே இருந்திருக்கிறார்கள்.

அதில் கூந்தலுக்குச் சொல்லப்பட்ட உவமையைப் படித்தபோது மலைச் சரிவிலிருந்து உருட்டப்பட்டுப் பூக்களின் பள்ளத்தாக்கில் விழுந்தது போல் ஒரு புதிய அனுபவத்தில் புளகித்தேன்.

**"கிலியாத் சரிவிலே**
**இறங்கி வருகின்ற**
**வெள்ளாட்டு மந்தை போல்**
**தோன்றும்**
**நின் கூந்தல்!"**

அடடே! அந்த அனுபவத்தை முற்றும் உணர்வதற்காகவேனும் நான் ஆடு மேய்ப்பவனாய் ஆக வேண்டும்.

●

பாரசீகப் பண்பாட்டில் கண்ணாடிக் கோப்பைகள் உரசும் சப்தங்களும், கிண்ணங்களில் திராட்சை மது குமிழியிடும் ஓசைகளும் கேட்டுக் கொண்டே இருக்கும்.

மீன்களுக்குத் தண்ணீர் மாதிரி அவர்களுக்குத் திராட்சை மது தேவைப்பட்டிருக்கிறது.

உமர்கயாமின் போதை கலந்த கிண்டலை நினைக்கும்போதெல்லாம் நெடியடிக்கிறது.

**"குடிப்பவனுக்கெல்லாம்**
**சொர்க்கமில்லை என்றால்**
**அது**
**என் உள்ளங்கையைப் போலவே**
**காலியாயிருந்திருக்கும்!"**

அபாரம்!

சொர்க்கத்தின் மீதே ஒரு வெடிகுண்டை வீசிவிட்டுப் போய் விட்டானே!

●

தந்தை மரணமடைந்த துக்கத்தை விசாரிக்க வந்த வெளி நாட்டுப் பிரபுக்கள் தாயின் மறுமண விழாவில் கலந்து கொள்கிறார்கள்.

ஹாம்லெட் உறைக்குள் ஒளிக்கப்பட்டவாள் போல் உள்ளுக்குள் அழுகிறான்.

அவனது கண்ணீர் வெள்ளத்திலிருந்து கூட ஓர் ஏளனம் கரையேறி வருகிறது.

**"கருமாதிக்காக**
**அவிக்கப்பட்ட**
**புலால்**
**கல்யாண மேஜையில்**
**பரிமாறப்படுகிறதோ?"**

அடே, நாடகப் புலவனே! உன் மேடையில் ஆடிய திரைகளில் நானொரு நூலாகவேனும் இருந்திருக்கக் கூடாதா?

●

இன்னும் இப்படி மனசுக்குள் உடைந்துடைந்து விழுந்திருக்கின்றன ஓராயிரம் மின்னல்கள்.

உடைந்து விழுந்த ஒவ்வொரு துண்டும் வெண்ணிலாவாய் முளைக்கும் வீரியம் கொண்டவை!





# எழுத்துலகைத் தூய்மைப்படுத்த மாணவர்கள் விரும்புகிறார்களா?

நேருக்கு நேர் நிகழ்ச்சி பற்றிய என் கட்டுரையைக் குறித்து இரு சகோதர எழுத்தாளர்களும், சில வாசகர்களும், கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சிலரும் எழுதியிருந்த கடிதங்களைப் படித்தேன்.

மதிப்புக்குரிய ஓர் எழுத்தாளரும் வேளாண்மைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த இரு மாணவர்களும் நான் கோபம் கொண்டு எழுதியிருப்பதாகக் கூறுகிறார்கள். என் கட்டுரையை இன்னொரு முறை அவர்கள் படித்துப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். சொல்லொண்ணா வேதனையுடன் தான் நான் என் அனுபவத்தை எழுதியிருக்கிறேன் என்பது விளங்கும். வேதனை என்ற வார்த்தையையும் நான் அக்கட்டுரையில் உபயோகித்திருக்கிறேன்.

மாணவர்கள் விளையாட்டுக் குணமுடையவர்கள், குறும்பில் பயிராகும் துடிப்புக் கதிர்கள் என்பதெல்லாம் எனக்குத் தெரியாததல்ல. ஆனால் விளையாட்டுக்கும் குறும்புக்கும் கூட ஓர் எல்லை உண்டு. விளையாட்டு வினையாகும் அளவுக்கு வளரக் கூடாது. இந்தச் சம்பவத்தில் மாணவர்களின் விளையாட்டு எல்லை மீறிப் போய் விட்டது என்பதே என் மன வருத்தத்திற்குக் காரணம். (மாணவர்கள் எழுத்தாளர்களிடம் மட்டும் இப்படி நடந்து கொள்ளவில்லை. நேருக்கு நேர் நிகழ்ச்சிக்கு முன்னால் பேசிய ஒரு பிரபல அரசியல் தலைவரிடமும் மாலையில் நடந்த நாடகத்தில் நடித்த நடிகையிடமும் இரவில் மெல்லிசைக் குழுவினரிடமும் அநாகரிகமாக நடந்து கொண்டதாகவும், அதன் காரணமாக ஏழு மாணவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாகவும் எங்களுக்கு விழா நிர்வாகிகளில் ஒருவரே தெரிவித்தார்.)

சகோதரிகள் உஷா சுப்பிரமணியமும், சுபாஷிணியும் கூறிய பதில்களில் காவியச் சுவை இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. அந்தக் காவியச் சுவையை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்களுடைய பதிலையும் தன்னுடைய பதிலையும் கேட்டு மாணவர் சமுதாயம் கரவொலி எழுப்பி மகிழ்ச்சியைத் தெரிவித்ததாகத் திரு கோவி கூறுகிறார். மாணவர்களின் கரவொலி பெற வேண்டும் என்பதற்காக நானும் அவர்களுக்குப் பிடித்தமான பதிலை நகைச் சுவை என்ற போர்வையில் அல்லது காவியச் சுவை என்ற பொன்னாடையில் புகுந்து கொண்டு சொல்லிவிட்டு வந்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்திருந்தால் என் மனச் சாட்சிக்கு நான் துரோகம் செய்தவளாக இருந்திருப்பேன். அதனால்தான் மாணவர்களின் அநாகரிகமான, அசிங்கமான கேள்விகளைக் கண்டித்து மேடையிலேயே பேசினேன். 'நீங்கள் என் மீது கல்லெறிந்தாலும் நான் பயப்படப் போவதில்லை. உங்களைத் திருப்திப்படுத்துவதற்காக உங்களின் கைதட்டலைப் பெறுவதற்காக என் மனம் ஒப்பாததை நான் பேச முடியாது' என்றேன்.

மாணவர்கள் வழி தவறிப் போகும்போது அதைத் துணிச்சலோடு கண்டிப்பதுதான் அவர்களுக்கு நன்மை பயக்குமே ஒழிய, 'அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள். நாம்தான் அட்ஜஸ்ட் செய்து கொண்டு போக வேண்டும்' என்று சொல்லித் தவறான வழியிலேயே அவர்களை ஊக்குவிப்பது அவர்களுக்கு நன்மை செய்வதாகாது. 'பெரும் கும்பலாக இருக்கும் மாணவர்கள் நம்மை என்ன செய்து விடுவார்களோ' என்ற அச்சமும், கோழைத்தனமும் தான் இப்படித் தவறான வழிகளில் செல்லும் மாணவர்களுக்கு வக்காலத்து வாங்குபவர்களின் உண்மை நிலை.

என் கட்டுரையில் நான் சொல்லாததை சகோதரி விமலா ரமணி கற்பனை செய்து கொண்டு அது தமக்கு உடன்பாடில்லை என்கிறார். வேளாண்மைப் பல்கலைக் கழகத் துணை வேந்தரும் மற்ற நிர்வாகிகளும் எழுத்தாளர்களை வரவழைத்து வேண்டுமென்றே அவமதித்து அனுப்புவதாக நான் சொல்லவில்லை. அவர்களுடைய நிர்வாகத்தின் கீழ் இருக்கும் பல்கலைக் கழகத்தில் மாணவர்கள் இவ்வாறு நடந்து கொள்வதை அனுமதிக்கலாமா என்பதை அவர்கள் யோசிக்க வேண்டும் என்றுதான் கூறினேன். அடுத்த வருடத்திலிருந்தாவது இவ்வாறு நடக்காமல் அவர்கள் தகுந்த நடவடிக்கை முன்கூட்டியே எடுக்க வேண்டும் என்பதுதான் என் எண்ணம்.

கடைசியாக மாணவர்களின் அநாகரிகமான நடத்தைக்குக் கூறப்பட்டிருக்கும் சமாதானம் மிகவும் வேதனை அளிப்பதாயிருக்கிறது. ''எழுத்தாளர்கள் தரம் கெட்டுப்போய் எழுதுவதனால்தான் படிப்பவர்கள் ஆபாசமாகக் கேட்கிறார்கள். மஞ்சள் எழுத்தாளர்களின் நிறம் வெளுக்கும்போது அவர்களுக்குக் கோபம் வரத்தானே செய்யும்? இவர் மட்டும் தம் கதையில் மஞ்சள் எழுத்தைப் புகுத்தி இன்றைய இளைஞர்களைக் கெடுக்க வழி செய்யலாம், நாங்கள் மட்டும் கேள்விகளைக் கேட்டால்



நகரத்தில் உள்ள காற்று தூய்மைக் கேடானது. இதனால் டி.பி., ஆஸ்துமா மூச்சுக்கிளை அழற்சி என்று சொல்லப்படும் பிராங்கைட்டிஸ் ஆகிய நோய்கள் பரவுவதாக விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். ஜப்பான் நாட்டில் போக்குவரத்து நெரிசல் மிகுந்த இடங்களில் நல்ல காற்றைச் சுவாசிக்க ஒரு கருவி வைத்துக் கட்டணம் வசூலிக்கிறார்கள். இது சிறிது நேரம் பிராண வாயுவை வெளியே தள்ளுகிறது. கட்டணம் செலுத்துபவர்கள் இந்தப் பிராண வாயுவைச் சுவாசிக்கிறார்கள்.

—ஏ. கே. நாசர்

கோபம் பொத்துக் கொண்டு வருகிறதே!' என்றெல்லாம் சிலர் கேட்டிருக்கிறார்கள்.

இந்தக் குற்றச்சாட்டைக் கூறுகிற நண்பரே மாணவர்கள் யாரும் என் கதைகளைப் படித்திருக்க மாட்டார்கள் என்பதையும் கூறுகிறார். என் கதைகளைப் படிக்காமலே மஞ்சள் எழுத்து என்றும், ஆபாசம் என்றும் எப்படி முடிவுக்கு வந்தார்கள்? நாற்பது வருடங்களாக எழுதி வரும் என்னுடைய முந்நூறுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், முப்பது நாவல்களில் 10 சதவிகித படைப்புகள் மட்டுமே பால் உணர்வை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவை. மற்றவைகளெல்லாம் தாய்ப் பாசம், சகோதர பாசம், தியாகம், நன்றி, பெண்மையின் உயர்வு, தர்ம சிந்தனை, தெய்வ நம்பிக்கை, பிறர்க்கு உதவுதல், பொதுத் தொண்டு போன்ற உயர்ந்த மனப் பண்புகளை மையமாகக் கொண்டு புனையப் பட்டவை. அவ்வாறிருக்க, சமீபத்தில் ஒரு மாதமிருமுறைப் பத்திரிகையில் குறும்புத்தனமாக வெளியிடப்பட்ட என்னுடைய ஒரு நாவலின் சிற்சில பகுதிகளைமட்டும் Out of Context ஆகப்படித்து விட்டு என்னை ஆபாச எழுத்தாளன் என்று முடிவு கட்டுவது மிகப் பெரிய அநியாயம்.

அப்படியே வாதத்துக்காக என் எழுத்து ஆபாச ரகத்தைச் சேர்ந்தது என்றே வைத்துக் கொண்டாலும் அதைத் தெரிந்து வைத்திருப்பதாகக் கூறுபவர்கள் என்னை ஒதுக்கித் தள்ளியிருக்கவேண்டுமே யல்லாது, என்னை அழைத்து, மேள தாளத்தோடு மேடைக்குக் கூட்டிச் சென்று இது போல அநாகரிகமாக நடந்து கொள்ள வேண்டியதில்லையே? இதுவா டண்பாடு?

'பல கேள்விகளைக் கொடுத்தோம். அசிங்கமான கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் விட்டிருக்கலாம்' என்று மற்றொரு சமாதானம். ஒருவரை நம் வீட்டிற்கு விருந்துக்கு அழைத்து இலையில் அறுசுவை உண்டியையும் பரிமாறிவிட்டு கூடவே ஒரு கிண்ணம் அசிங்கத்தையும் வைத்து விட்டு 'உங்களுக்கு வேண்டியதை மட்டும் சாப்பிடுங்கள். வேண்டாததை விட்டு விடுங்கள்' என்று சொல்கிற மாதிரி இருக்கிறது.

இரு தரப்பினரின் கருத்துக்களையும் வெளியிட்டு விட்டு கல்கி பத்திரிகை நடுநிலைமை வகித்துக் கொண்டிருக்கிறது. இது விஷயமாக அதன் கருத்து என்னவென்று தெரியவில்லை. எனவே தங்கள் கருத்தையும் தெரிவித்தால் நலம்.

சென்னை-4 ஹேமா ஆனந்ததீர்த்தன்

[திரு ஹேமா ஆனந்ததீர்த்தன் கோரியிருப்பது போல் கல்கி பத்திரிகையின் கருத்தையும் கூறி இந்த விவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைக்கிறோம்.

எழுத்தாளர்களை இலக்கிய சர்ச்சைக்காக அழைத்துவிட்டு அவர்கள் படைப்பிலக்கியத்தில் உள்ள குறை நிறைகளை விமரிசிக்காமல் —அது பற்றிய கேள்விகளைக் கேட்காமல் தனிப்பட்ட முறையில் அவர்களை இழிவுபடுத்துவது போன்ற கேள்விகளைக் கேட்பது அநாகரிகம். மாணவர் சமுதாயத்துக்கு இழுக்கு. ஆபாசமாக ஒரு எழுத்தாளர் எழுதியிருந்தாலும் அவரது எழுத்தில் உள்ள ஆபாசத்தைப் பற்றித்தான் கேள்வி எழுப்பப்படவேண்டுமே தவிர அவரையே ஆபாசக் கேள்விகளால் துளைத்தெடுக்கக் கூடாது.

எழுத்தாளர்கள் ஆபாசமாக எழுதுவதால் தான் மாணவர்களுக்கு இப்படிக் கேள்விகள் கேட்கத் துணிவு வருகிறது என்ற வாதத்தில் ஓரளவு நியாயம் இருக்கிறது. ஒருவர் எழுத்தைப் படித்திருக்கவே வேண்டாம், ஆபாசமாக எழுதுகிறார் என்ற செய்தி பரவினாலே போதும். அந்த எழுத்தாளர் மீது மரியாதை குறைந்து கிண்டலான கேள்விகள் பிறப்பது இயல்பு. ஆனால் இதற்காக எழுத்தாளர்களை மட்டும் குறை கூறிப் பயனில்லை. இத்தகைய எழுத்துக்களை ஆவலுடன் கேட்டு வாங்கிப் பிரசுரிப்பதன் மூலம் மேன்மேலும் இப்படிப் பலரை எழுதத் தூண்டும் பத்திரிகை ஆசிரியர்களே எழுத்தாளர்களை விடவும் அதிகமாகக் கண்டனத்துக்கு உள்ளாக வேண்டியவர்கள்.

மாணவர்கள் எழுத்துலகைத் தூய்மைப் படுத்த உண்மையிலேயே விரும்பினால் (விரும்புகிறார்களா?) அதை வெகு சுலபமாகச் செய்யலாம். ''ஆபாசப் படங்கள்; கதைகளுடன் வரும்பத்திரிகைகளைக்காசுகொடுத்து வாங்க மாட்டோம்; வீட்டிலும் யாரையும் வாங்க அனுமதிக்க மாட்டோம்'' என்று உறுதி பூண்டால் போதும். செக்ஸ் கதைகளும் படங்களும் பத்திரிகை உலகிலிருந்து ஓட்டம் பிடிக்கும். ஏன், கோவை வேளாண்மைப் பல்கலைக் கழக மாணவர்களே இப்படி ஒரு தீர்மானம் நிறைவேற்றி முன்னோடியாகத் திகழலாமே?

—ஆர்.]

# காளிமுத்துவிற்கு ரெஸ்ட்





அ.இ.அ.தி.மு.க. கொள்கை பரப்பு செயலாளர் ஜெயலலிதாவிடம் ஒரு பேட்டி வாங்கலாம் என்று அந்த நிருபர் வீட்டினுள் நுழைந்தார்.

அப்போது ஜெயலலிதா 'என்னைக்கவர்ந்த பாதிரியார்' என்கிற தலைப்பில் யாருக்கும் தெரியாத ஒரு பாதிரியாரைப் பற்றி மும்முரமாக மூன்று பக்கக் கட்டுரை எழுதிக் கொண்டிருந்தார்.

நிருபர்: வணக்கம்! உங்களிடம் சில கேள்விகள் கேட்கலாமா?

ஜெயலலிதா: அந்தப் பேச்சுக்கே இடம் இல்லே. கொள்கை இல்லாத கட்சி தி.மு.க

நிரு: இல்லே. அதாவது... சத்துணவுத் திட்டம் தொடர்ந்து நடக்குமா?

ஜெய: கோட்டையைப் பிடிக்கலாம் என்று கருணாநிதி நினைக்கிறார். அதுதான் நடக்காது.

நிரு: நான் கேட்க வந்தது...

ஜெய: தெரியும். கருணாநிதி பல்டி அடிக்கிறார். பாண்டிச்சேரியில் சதி என்கிறார்.

(நிருபருக்கு இந்த இடத்தில் சந்தேகம் வந்துவிட்டது. தான் ஏதாவது தவறாகக் கேட்டுவிட்டோமோ என்று).

நிரு: சரி. பிறகு வருகிறேன்.

ஜெய: புரட்சித்தலைவர் திட்டம் வெற்றிகரமாகச் செயல்படுகிறது. — கருணாநிதி இ. காங்கிரஸுக்குப் பல்லக்குத் தூக்குகிறார்— அண்ணாவின் கனவு நினைவாகிறது.

(நிருபர் தலை சுற்றிப் போய் கையிலிருக்கும் பையைப் பார்த்துக் கொள்கிறார். அதிலிருந்து ஒரு கல்யாணப் பத்திரிகை வெளியே தெரிகிறது. அடடா! பொதுவாக கல்யாணங்களுக்கு மணமக்களை வாழ்த்தப்போகும் போதுதானே நமது அரசியல்வாதிகள் ஒருவரை ஒருவர் தாக்கிப்பேசுவது வழக்கம் என்று நிருபருக்குச் சட்டென நினைவுக்கு வர அந்தப் பத்திரிகையைப் பைக்குள் அழுத்திக்கொண்டு கண்ணுக்குத் தெரிந்தபடி கல்யாணப் பத்திரிகையை வைத்ததை எண்ணி நொந்தபடி வெளியே நடக்கிறார்.) ஒரு விஷயம் நிருபருக்குத் தெளிவாகப் புரிகிறது.

காளிமுத்து இப்போதெல்லாம் அவ்வளவு ஸ்ட்ரெயின் பண்ணிக் கொள்வதில்லை. ஜெயலலிதா வந்த பிறகு — காளிமுத்துவிற்கு ரெஸ்ட்.

---

## கைவினைத் திறன்

மேலைநாடுகளினுல் மெஷின்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைக் காட்டிலும் கைவினைத் திறனால் செய்யப்பட்ட பொருள்களுக்கு விலை அதிகம். லண்டனில் ஜார்ஜ் டேனியல்ஸ் என்பவர் கைவினைத் திறனிலேயே பாக்கெட் கடிகாரங்கள் செய்து விற்பவர். ரொம்பப் பணக்காரர்கள்தான் இந்த கெடியாரத்தை வாங்க முடியும். இக்கெடியாரங்களில் ஸ்பிரிங்குகளைத் தவிர மற்ற பாகங்கள் எல்லாம் கையினாலேயே செய்யப்பட்டவை. டேனியல்ஸ் மிகவும் ரசித்துச்சொல்லும் ஒருசெய்தி: ஒரு சமயம் மிகவும் நுண்ணிய எக்கு பாகம் ஒன்றைச் செய்து கொண்டிருக்கும்பொழுது அது தவறிப்போய்க் கீழே விழுந்து விட்டது. எவ்வளவு தேடியும் காணவில்லை. இரண்டு மூன்று மணி நேரத்திற்குப் பிறகு அந்தப் பாகம் தன் கட்டை விரல் நகத்திற்கு அடியில் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டு பிடித்தார்.

—ரிஸர்ச் அண்ட் ரெஃபரன்ஸ்



# எத்தனை வெளுப்பு! எத்தனைத் துணிகளின் குவிப்பு...

**கோபுரம்**
சலவை சோப்பு

**ஒரு குடும்பத்தின் துணிகளையெல்லாம் தூய்மையாக்க போதுமே - ஒரே ஒரு கோபுரம் மார்க் சலவை சோப்!**

எல்லா காதி கிராப்டிலும்,
கடைகளிலும்
விற்பனையாகிறது.



தமிழ்நாடு கதர் கிராமத்
தொழில் வாரியம்,
சென்னை 600 108

DIPR 509 83 ELEGANT

# ரோஜா, பூக்களின் ராஜா!




- ரோஜா மலர் இங்கிலாந்தில் 1486ம் ஆண்டிலேயே அரச சின்னமாக மதிக்கப்பட்டது.

- 50 டிகிரி பாரன்ஹீட் வெப்ப நிலை உள்ள இடங்களில்தான் ரோஜா மிக நன்றாக வளருகிறது. காற்றில் அதிகமான ஈரப்பசை அதிக அளவு சூரிய வெப்பம் ஆகியவற்றை ரோஜா வெறுக்கிறது. எனவேதான் மலைப் பிரதேசங்களில் செழித்து வளருகிறது.

- சமவெளிகளில் வீட்டில் ரோஜா பயிரிட ஆசை எனில் அதற்கேற்ற எட்வர்ட் ரோஸ் அல்லது ஆந்திரா ரெட் ரகங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ராஜா அல்லவா? அதற்குப் பணிவிடைகளும் அதிகம்.

- 3 பாகம் மக்கிய மாட்டுச் சாணம், 2 பாகம் செம்மண், ஒரு பாகம் மணல் இந்தக் கலவை ரோஜாக்களுக்கு ரொம்ப ஏற்றது.

- ரோஜாவுக்கு அதிகமாக நீர் தேங்கி நிற்கக் கூடாது. எனவே ஆழக் குழி வெட்டி அடி மட்டத்தில் சரளைக் கற்களைப் போட்டு வடிகால் வசதி ஏற்படுத்த வேண்டும்.

- பயிர் வைப்பதற்கு மூன்று வாரம் முன்னதாகவே நிலத்தைக் கொத்திப் பண்படுத்திவிடவேண்டும். பயிர் வைக்க ஏற்ற காலம் ஜூலை முதல் பிப்ரவரி வரை.

- 2 – 4 அடி இடைவெளி விட்டு நட வேண்டும்.

- மாதமொரு முறை உரமிட வேண்டும். வீடுகளில் உபயோகித்து முடிந்த காப்பி, டீ தூள்களைப் போடலாம். திரவ எரு பின்வருமாறு தயாரிக்கவும்: எள், ஆமணக்கு, பிண்ணாக்கு இவற்றில் ஏதேனும் ஒன்றை நீரில் 4 முதல் 5 நாள் ஊறவைத்து மறுபடி தண்ணீர் விட்டுக் கரைசலாக்கி ஒரு ரோஜாச் செடிக்கு 5 லிட்டர் கரைசல் என்ற அளவில் அளிக்கலாம்.

- ரசாயன உரக் கரைசல் தயாரிப்பு: யூரியா 30 கிராம், அமோனியம் பாஸ்பேட் 30 கிராம், பொட்டாசியம் பாஸ்பேட் 30 கிராம், இந்தக் கலவையில் 30 லிட்டர் தண்ணீர் விட்டுக் கரைத்துப் பத்து நாளைக்கு ஒரு முறை இலைகள் மேல் தெளித்தால் அழகிய பெரிய மலர்கள் கிடைக்கும். கரைசலை அதிகமாகத் தெளிக்கக் கூடாது.

- புதிதாக நட்ட செடிக்கு அடிக்கடி நீர் விட வேண்டும். சற்று வளர்ந்த பின் வாரம் ஒரு முறை நீர் விட்டால் போதும்!

- கரைசல் உரம் தவிர ரோஜாச் செடி நட்ட உடனேயே ஒவ்வொரு செடிக்கும் பூமியில் உரமிட வேண்டும். கால் கூடை மக்கிய தொழு உரம், 30 கிராம் எலும்பு உரம், 10 கிராம் சூப்பர் பாஸ்பேட், அதே அளவு பொட்டாசியம் சல்பேட் ஆகியவற்றைக் கலந்து உரமிட்டு உடன் நீர் பாய்ச்சவும். கடைகளில் ரோஜா உரக் கலவை என்றாலே கிடைக்கும். இதில் இரண்டு டேபிள் ஸ்பூன் அளவு 15 நாளைக்கொரு முறை செடிக்குப் போடலாம்.

- ரோஜாவில் எத்தனை நிறங்கள்? இதில் இல்லாத நிறமே இல்லை எனலாம். இருவர்ண ரோஜாக்களும் உண்டு. டபிள்யூ. எச். லாரன்ஸ் என்பவர் 300 வகை ரோஜாக்களை எண்ணியிருக்கிறார்.

- ரோஜாக்களை மொட்டுக் கட்டுவதன் மூலம் (Budding மொட்டுக்கள் உள்ள நல்ல புதுக் கிளைகளை ஒட்டுதல்) ஒரே செடியில் பல்வேறு நிற ரோஜாக்களை மலர வைக்க முடியும். இதைச் செய்ய அபாரத் திறமை வேண்டும். மொட்டுக் கட்டி உருவான புதுச் செடி இரு ரகங்களின் உயர்ந்த குணங்களையும் பெற்றிருக்கும்.

- எட்வர்டு ரோஜா இதழ்களைச் சுத்தமான தேனில் கலந்தால் குல்கந்து மணக்கும். ரோஜா இதழ்களைத் தாமிர பாத்திரத்தில் காய்ச்சி, கண்ணாடிக் கூஜாவில் சூரிய ஒளியில் பல நாள் வைத்தால் கிடைப்பது பன்னீர். பன்னீரை உலோகப்பாத்திரத்

# அசோகவனம்

இளைஞர்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள ஏமாற்றங்களையும் கோப தாபங்களையும் வெளியிட வடிகால் தேடினர்கள். நாடக உருவில் அவற்றை அரங்கேற்ற வாய்ப்புக் கிட்டாத போது தோன்றின தெரு நாடகங்கள். இந்தத் தெரு நாடகங்களையே தமது நாடகத்தில் புகுத்தி மேடை ஏற்றியுள்ள கோமல் சுவாமிநாதன் புதுமையில் புதுமை செய்தவராகிறர்.

வழக்கம்போல் ஒரு மாபெரும் பிரச்னையை நாடகத்தின் மையக் கரு ஆக்கியுள்ளார் கோமல். இம்முறை வேலையில்லாத் திண்டாட்டம். கந்தசாமி வேலை தேடி அலையவும் அவன் சகோதரி வேலைக்குப் போகவும் என்னவெல்லாம் பாதிப்புக்கள் ஏற்படுகின்றன அக் குடும்பத்தில்! மிக ரசமாக அந்தக் குடும்பத்தின் சிரமங்களையும் அவற்றை வெற்றி கொள்ள அவர்கள் நடத்தும் போராட்டங்களையும், கருத்து மோதல்களையும் சித்திரித்திருக்கிறர். பாராட்டுப் பெறுகிறர்.

ஆனல் அடிப்படைப் பிரச்னைக்கான காரணங்களையோ அதற்குத் தீர்வு காண வழிமுறைகளையோ சரியானமுறையிலும் போதிய அளவிலும் நாடகாசிரியர் கூறவில்லை. அப்படியே கூறியிருந்தாலும் அவரது கம்யூனிஸக் கருத்துக்கள் நமக்கு உடன்பாடாக இருக்கப் போவதில்லை! நாடகத்தின் இறுதியில் ஊர்வலம் போய் உயிரை விடும் கந்தசாமி போல வேலை யில்லா இளைஞர்கள் நடந்து கொள்வதால் பிரச்னை தீருமா?

நாடகத்தில் வெளிச்சம் போட்டுக் காட்டப்படும் இரண்டாவது பிரச்னை பத்திரிகைகளில் ஆபாசம். துர்வாசரின் துக்ளக் கட்டுரைகள் காரணமாக இக்காட்சிகள் சோபிக்காமல் போகின்றன.

எழுதி டைரக்ட் செய்த கோமல் தமது பணியைச் செவ்வனே நிறைவேற்றியுள்ளார். இவரது மிகப் பெரிய பலம் வீராசாமி, ஆர். கே. ராமன், பாபு மோகன், ராஜ்மதன், லலிதா, சந்தானம் போன்ற சிறந்த நடிகர்கள் இவரை முற்றிலும் நம்பி முழு ஒத்துழைப்புத் தந்து வருவதே.

மேடை நண்பர்கள் என்றுமே சோடை போனதில்லை.

**-குட்டி கிருஷ்ணன்**

---

தில் வைத்துப் பூமியில் பல நாள் புதைத்தால் மேலாக அத்தர் திரண்டு வரும்.

- ரோஜாவுக்கு வாசனைத் திரவியமாகவும், அழகூட்டும் சாதனமாகவும் மருந்தாகவும் பலவித உபயோகங்கள்.

- இந்தியாவில் தாமரை இறைவனுக்குரிய மலர். ரோஜாவோ ராஜாவுக்குரிய மலர். திருமணத்தில் மணமகன் மணமகள் ராஜா ராணி போல் முக்கியத்துவம் பெறுவதால் எல்லாமதத்தினரும்முகூர்த்த நேரத்தில் ரோஜா மாலைகளை விரும்பி அணிகின்றனர்.

- இந்தியாவிலேயே மிக அதிகமாக ரோஜா விளைவது காஷ்மீரில். அடுத்து உத்தரப் பிரதேசம்.

- ரோஜாப் பயிர் வைப்பதால் நல்ல லாபம் உண்டு. 100 மலர்கள் 20 ரூபாய்க்கு விலை போகும். முதல் வருடமே பூக்க ஆரம்பித்து விடும். ரோஜா தினம் பறிக்கப்படுவதால் வேலை வாய்ப்பு அதிகரிக்கும். காலையில் பூப்பறித்துவிட்டுச் கூலி பெற்றுப் பிறகு வீட்டு வேலைகளைக் கவனிக்கப் பெண்கள் போகலாம். பருவப் பயிர் அல்ல; வருடம் முழுவதும் பூக்கும். பெரு நகரங்களைச்சுற்றியுள்ள கிராமங்களில் பயிரிடுதல் பலன் தரும்.

- ரோஜாவின் தாயகம் ஈரான். ரோஜாவைச் சிறப்பித்துப் பாடிய அந்நாட்டின் புகழ் பெற்ற கவிஞர் உமர்கய்யாம் தமது கல்லறை மீது தினம் ரோஜா இதழ்கள் விழவேண்டும் என்று பிரியப்பட்டார். எனவே அங்கு ரோஜாத் தோட்டம் அமைந்தது.

- ரோஜாவைக் கையில் ஏந்தாத மொகலாய அரசர். அரசன் படத்தைப் பார்ப்பது அரிது. அவர்களுக்கு அடுத்தபடியாக ரோஜா மீது அபரிமித ஆசை வைத்தார் நமது முடிசூடா மன்னர் நேரு.

சென்னை, தோட்டக்கலை உதவி இயக்குனர் திரு பெ. **பிரகாஷ்** கூறக் கேட்டு எழுதியவர்
**சிக்கி**

மேலட்டை வண்ணப் படம்: **வித்யாவ்ரதா**





# கள்வடியும்பூக்கள்

பழகமில்லாமல், புதுசுமில்லாமல் ஒரு காதல் கதை. சிக்கலில்லாத பாத்திரங்கள். சோகமான முடிவு.படம் வெள்ளி விழாவைக் காண வேண்டும் என்ற நம்பிக்கையுடன் 'நெறியாண்டிருக்கும்' வி. கார்த்திகேயன். மறுரா இலக்கியத்தனமான தலைப்பு. (பொருந்துகிறதோ?)

மெலிதான வெட்கமாகட்டும், காதலனைச் 'சீண்டிவிடுகிற லயமாகட்டும், அவன் பிரி கையில் சிவக்கிற கண்ணாகட்டும், கண வனின் பரிபூரண அன்பிற்கு அடிமையாகி அவன் பாதம் பணிகையில் குமுறுவதாகட் டும், பின்னால் பழைய காதலனுக்குப் புத்தி சொல்கிற உறுதியாகட்டும் — நளினியின் முகத்தில் வித்தைகள் சுலபமாய்க் கைகூடு கின்றன.

ஸ்ரீநாத் என்னதான் ஓடுகிற பாம்பைக் கையால் பிடிக்கிற இளைஞராய் இருக்கட் டுமே. அவருடைய கலைந்த முடியும், ஊதிய முகமும், பொங்கிய கண்களும், கொஞ்சம் போல விடைத்த மூக்கும் தமிழ்க் கதா நாயகனுக்கு மீறிய வயசைக் காண்பிக்கின் றன. இன்னும் கொஞ்சம் இளைய முகமாய் இருந்திருந்தால் கதையில் கவர்ச்சி கூடி யிருக்கும்.

ரவியிடம் பாத்திரத்திற்கேற்ற கண்ணி டம். கொஞ்சம் மெருகேற்றினால் இன்னும் உயரங்களை எட்டிப் பிடிக்கலாம்.

பூர்ணம் விசுவநாதனுக்கு ரெண்டும் கெட் டான் பாத்திரம். கலித் தொகையையும் குறுந்தொகையையும் கணக்குப்பிள்ளை மேஜையடியில் அலசிக் கொண்டு ஒட்டாமல் வந்து ஒட்டாமலே போய்விடுகிறார்.

வெளியில் துப்பாக்கியும் மீசையுமாய் போலீஸ் காத்திருக்க, கோயிலுக்குள் ஒளிந்து கொண்டிருக்கிற கொலைகாரனை (பூச்சாண்டி காட்டுகிற சிகப்பு டிரஸ் வேறு) ஓங்காரம் பின் பக்கமாய் உருண்டு உருண்டு வந்து பிடிக் கிறபோது அமெச்சூர் டிராமாக்கள் எவ்வளவு உசத்தி என்று புரிகிறது.

''கதாநாயகன் டபுள் ரோல், வில்லன் டபுள் ரோல், கதாநாயகி டபுள் ரோல்....'' என்று கதை சொல்லும் மனோரமா — அவரது கணவனாக கவுண்ட மணி. புளிப்பேறாத காமெடி. இந்த மாதிரிக் கொஞ்சம் இயல் பான நகைச் சுவையைப்பார்த்து நாள்பட்டுப் போய்விட்டதா — இதென்னவோ அத்திப் பட்டுக்குத் தண்ணீர் வந்தேவிட்ட மாதிரி இருக்கிறது.

பேனாவுக்கு இங்க் போடாமலே எழுதின மாதிரி வசனங்கள். ஒரிஜினலாய்க் கொஞ்சம் கடன் வாங்கிக் கொஞ்சம் என்றிருக்கிற ஷ்யாமின் இசையிலிருக்கிற கவர்ச்சிக்குக் கூடுதல் உபகாரம் ஜேசுதாஸின் குரல், தேனில் ஊறிய பலாப் பழம் மாதிரி.

சொல்கிற முறையில் ஒன்றிரண்டு குறை யிருந்தால் கூடச் சமாளித்துக் கொள்ளலாம் என்ற டைரக்டரின் துணிச்சல் போதாதா?

-ஜெயமன்மதன்

# எல்லாம் மாயம் தானா?

## ஸ்ரீ.ஸ்ரீ



1930 வரை மரபுக் கவிதை எழுதி, பின்னர் புரட்சிகரமாய்ப் புதுக்கவிதை எழுதத் தொடங்கி,'' 1930 வரை கவிதை என்னை நடத்திற்று; அதன்பிறகு நான் கவிதையை நடத்திச்செல்கிறேன்'' என்று முழங்கியவர் — ஸ்ரீஸ்ரீ என்னும் ஸ்ரீரங்கம் ஸ்ரீநிவாசராவ். தெலுங்கு இலக்கியத்தின் புயலெனக் கருதப்படுகிறவர் சமீபத்தில் மறைந்து போனார். அவரது 'மஹா பிரஸ்தானம்' என்ற கவிதைத் தொகுப்பிலிருந்து சிலவரிகளை மொழிபெயர்த்துத் தருகிறோம்.

எரிந்த தீக்குச்சி
தேய்ந்த சோப்புக்கட்டி
ஓய்ந்த நாய்க்குட்டி
— ஈனப் பொருள்களில்லை இவையெல்லாம்
மேன்மைக் கவிதைக்குக் கருப்பொருட்கள்.
மரப் பலகையும்
ரொட்டித் துண்டும்
பழத்தோலும்
— உன்னையே உற்றுப் பார்க்கின்றன
உண்மைப் பரிமாணத்தை உணரச்
சொல்கின்றன.
கவிதாவேசம் வேண்டும்
கருத்திலுந்தல் வேண்டும்
கண்ணென்று இருந்தால் பார்த்து....
வாக்கென்று இருந்தால் எழுதி....
— பிரபஞ்சம் ஒருபத்மவ்யூகம்
கவித்வம் ஒருதீரா தாகம்.

• • •

அன்று மாலை
— ராக்ஸியில் நார்மாஷேரர்
பிராட்வேயில் காஞ்சனமாலா
எங்கே போவதென்று மயங்கும் மாணவன்
— கூப்பி கிருஷ்ண விலாஸில்
ஒருபுறம் பாதம் ஹல்வா
மறுபுறம் சேமியா இட்லி
எதை உண்பதென்று
மயங்கும் குமாஸ்தா
— இந்தப்புறம் கடன்காரன்
அந்தப்புறம் பிள்ளைகளின் பசி
தூக்குக் கயிறு கடலின் மடியா
குழம்பித் தவிக்கும் குடும்பஸ்தன்.

• • •

ஆம் நிஜம்; ஆம் நிஜம்
ஆம் நிஜம், நீ சொன்னது.
நீ சொன்னது, நீ சொன்னது
நீ சொன்னது நிஜம் நிஜம்.

இல்லை சுகம், இல்லை சுகம்
இல்லை சுகம் ஜெகத்தினில்
வாழ்க்கை வீண் கல்வி வீண்
கவிதை வீண் வீண் வீண்;

நாமெல்லாரும் அடிமைகள்
சடலங்கள் செக்கு மாடுகள்
பின்னாலும் மோசம் முன்னாலும் மோசம்
இடமும் வலமும் மோசம்.

ஆம் நிஜம் ஆம் நிஜம்
நீ சொன்னது நிஜம் நிஜம்.
வாழ்க்கையென்னும் பழம் நிறைய
வழிந்து நிற்கும் விஷம் விஷம்.

• • •

எல்லாமே மாயம்; எதுவுமே மாயம்;
இல்லையா என் இனிய வேதாந்தியே?
ஜமீன்தாரின் ரோல்ஸ்ராய்ஸ்
பீரங்கி விஷவாயு
—எல்லாமே மாயம்?
உழவனின் வியர்வை
உழைப்பவனின் மன வேதனை
பிச்சைக்காரனின் ஒட்டிய வயிறு
—எல்லாமே மாயம் என்கிறாய்?
சூறாவளி, பூகம்பம்
போராட்டம், யுத்தம்
யுத்தம், யுத்தம்
மாயம் என்கிறாய்?
ஏய், இவை என்னென்கிறாய்?

**தமிழாக்கம்: ஜெயரதன்; ஜி. ஸி. ஜீவி**
**ஸ்ரீஸ்ரீ புகைப்படம் உதவி: டி. ஆஞ்சநேயலு**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani — Editor: K. Rajendran

